# THE SURGEON GENERAL'S PRESCRIPTION

AND

# VICHU'S WIFE

Adaptations of Mr. V. V. SRINIVASA IYANGAR'S DRAMAS

IN TAMIL

BY

**Rao Bahadur P. SAMBANDAM,**
B.A., B.L.,

Author of :

"The Two Sisters," "Galava." "Manohara," "Blind Ambition," "The Two Friends," "Fate and Love," "Sarangadhara," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Farces," "Siruthondar," "The Golden Fetters," 'True Love," "The Bandit Chief," "Markandeya," "The Fair Ghost," "The Merchant of Vanipura," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "The Goo[illegible]," "Geetha Manjari," "Harischandra," "As We [illegible] We Reap," "The Curse of Oorvasi," "Chand[illegible] "The Demon Land," "Sabapathy" Part I, [illegible]gal Feast" or "Sabapathy" Part II, "A Re[illegible] "Sabapathy" Part III, "Blessed in a Wife," "The Dancing Girl," "Subbadra Arjuna," "Karna the Giver," "Sahadeva's Stratagem," etc., in Tamil, and "Harischandra," and "Yayathi" in English.

**FIRST EDITION.**

Madras

PRINTED BY INDIA PRINTING WORKS.

 1929 [Price per Copy [illegible]

1-00

# சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து

## விச்சுவின் மனைவி

---

ம-ா-ா-ஸ்ரீ வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள்
ஆங்கிலத்தில் எழுதிய நாடகங்களின்
தமிழ் அமைப்பு.

ராவ பஹதூர்

**ப. சம்பந்த முதலியார்,** பி. ஏ., பி. எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ்நாடகங்கள் :—

லீலாவதி - சுலோசனை, கள்வர் தலைவன், மகபதி, மனோஹரன், இரண்டு நண்பர்கள், சாரங்கதரன், நற்குல தெய்வம், சத்ருஜித், யயாதி, மார்க்கண்டேயர், விஜயரங்கம், காதலர் கண்கள், பேயல்ல பெண் மணியே, தாசிப் பெண், மெய்க்காதல், பொன்விலங்குகள், சிம்ஹள நாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, வாணீ புர வணிகன், ரஜபுத்ரவீரன், ஹரிச்சந்திரன், ரத்னாவளி, புஷ்ப வல்லி, கீதமஞ்சரி, பிரஹசனங்கள், ஊர்வசியின் சாபம், அமலாதித்யன், சபாபதி முதற் பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், வள்ளி மணம், முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், புத்த அவதாரம், வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, முதலியன.

---

முதற் பதிப்பு.

---

சென்னை

இந்தியா அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது.

---

1929.

 [விலை [redacted]

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS**

P. VIJIARANGA MUDALIYAR

AND

P. MANICKAVELU AMMAL

&

**MY FRIEND**

C. RANGAVADIVELU

# சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து

## நாடக பாத்திரங்கள்.

---

| | |
|---|---|
| சீதாபதி முதலியார் ... | பென்ஷன் வாங்கிக்கொண்ட ஓர் ஆஸ்பிடல் அஸிஸ்டென்ட். |
| தேவி ... ... | அவர்மனைவி. |
| கமலா ... ... | அவருடைய பெண். |
| கிருஷ்ணமூர்த்தி ... ... | அவருடைய மகன். |
| அட்[illegible]ரசாமி ... ... | அவருடைய வேலையாள். |
| சோமசுந்திர முதலியார் ... | பழவேற்காடு ஜமீன்தார். |
| கணபதிவாத்தியார் ... ... | ஒரு தமிழ்வைத்தியர். |
| ருக்மணி ... ... | தேவிக்கு அறிமுகமான பக்கத்து வீட்டுக்காரி. |
| ஜோஸ்யம் சூர்யப்பிரகாச ஐயர்... | ஒரு ஜோஸ்யர். |
| கர்னல் ஹமர் ஸ்மித் ... | சர்ஜன்ஜெனரல். |

# சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து

இடம்—சீதாபதி முதலியார் வீட்டில் ஓர் அறை.

காலம்—சாயங்காலம்.

கமலா, ஒரு சோபாவின்மீது சாய்ந்தவண்ண மிருக்கிருள், அவளுடைய காலின்மீது ஒரு சால்வை போர்த்தியிருக்கிறது. சற்று தூரத்தில் ஒரு நாற்காலியின்மீது சீதாபதி முதலியார் உட்கார்ந்திருக்கிருர். சோபாவின் அருகில் தேவி நின்றுகொண்டிருக்கிருள்.

சீ. இந்த வியாதி குணமாக வேறென்றும் ஔஷதம் எனக்குத் தோன்றவில்லை!

க. என் வியாதியை குணமாக்கவல்ல ஔஷதத்தை அப்பா எனக்குக் கொடுப்பாரென்று எவ்வளவு கோருகிறேன்!

தே. அது என்ன ஔஷதமது? அதை இவளுக்குக் கொடுக்கிறது தானே நீங்கள்?

சீ. பேசாமலிரு! வியாதிகளின் குணங்களைப்பற்றியும் வைத்திய சாஸ்திரங்களின் வியவஹாரங்களைப்பற்றியும் பெண்பிள்ளைகளுக்கென்னதெரியும்? ஆண்பிள்ளைகளாகிய எங்களுக்கே தெரியவில்லையாம்—எல்லாம்!

தே. வாஸ்தவம்தான், அதுதான் எனக்கு வருத்தமாயிருக்கிறது. ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் இவ்வளவு வித்தியாசமாக ஏன்படைப்பித்தாரோ பிரம்மா? அது போகுற் போகட்டும், திடீரென்று நமது குழந்தைக்குண்டான வியாதியை சுவஸ்தப்படுத்த உங்களுக்கென்ன தடை?

சீ. என்ன தடை? ஒன்றுமில்லை!—தற்காலத்திய மொட்டைப் பசங்களெல்லாம் என்னைப் பழயநாட் கிழம் என்று சொல்லுகிருர்களே அவ்வளவுதான்.

தே. சொல்லுகிறவர்கள் சொல்லட்டும்! அதை நீங்கள் கவனிக்காதீர்கள். கமலா பிறந்த வருஷத்திற்கு முன்வருஷம் வடக்கே

இருந்துவந்த ஜமீன்தார் ஒருத்தருக்கு நீர் வயித்தியம் செய்து, இருபது நாள் விடாமலிருந்த ஜுரத்தை நீர் சொஸ்தம் செய்தது எனக்கு ஞாபகமில்லையா என்ன? அவர் உமக்கு ஒரு சரிகை தலைகுட்டை கொடுத்தாரே! எனக்குப் பட்டுப் புடைவையொன்று கொடுத்தார். அதை இன்னும் என் பெட்டியில் வைத்திருக்கிறேன்.

சீ. ஆமாம்! அதெல்லாம் அந்தகாலம், இப்பொழுது யார் என்னைக் கவனிக்கிறார்கள்? காலம் கெட்டுப்போய்விட்டதென்றால்! இப்பொழுதிய காலம், இந்த மெடிகல் காலேஜில் படிக்கிற தலை மயிர் கத்தரித்துக்கொண்டிருக்கும் மொட்டைப் பசங்களுக்குத்தான்!

தே. பால ஜோஸ்யன் விருத்த வைத்தியன் என்று பழமொழியிருக்கிறதே!

சீ. இந்தப் பழமொழிகளெல்லாம் புத்திசாலிகளாக வேண்டும் என்று விரும்புவர்களுக்கு—தற்காலத்திய புத்தியில்லாத பசகளுக்கா?

தே. அதிருக்கட்டும்—மூர்த்தி யெங்கே போனான்? எதோ இங்கிலீஷ் டாக்டரை அழைத்துக்கொண்டு வருவதாகச் சொல்லிக்கொண்டிருந்தானே—யாரோ ஜெனரல் என்று சொன்னானே.

சீ. ஆ! அதுதான்—அதுதான் வந்தது! இவ்வளவு உண்டு மொட்டைப்பையன்! அவனென்ன சொல்லுகிறானென்றால்-என் சொந்த பெண்ணிற்கு நான் மருந்து கொடுக்கக்கூடாதென்கிறானே! இங்கிலீஷ் டாக்டராம்! இங்லீஷ் டாக்டருக்கு தமிழர் உடம்பு சமாசாரம் என்ன தெரியும்! கெட்டுப்போய்விட்டதென்றால்! உலகமே கெட்டு போச்சு!—சர்ஜன் ஜெனரலாம்!

தே. மூர்த்தியென்ன புத்தியில்லாதவனா? அவன் பி.எ. பாஸ்பண்ணியிருக்கிறானே, அந்த பெரிய டாக்டரை அழைத்துக் கொண்டு வரவேண்டும் என்று அவன் சொல்லுவதற்கு தக்க நியாயங்கள் இராமற் போகாது. நீங்கள் மெட்டிரிக்குலேஷன் பரீக்ஷை கூட பண்ணவில்லையென்று நேற்றுசொன்னானே என்னிடம்!

சீ. ஆஹா! அப்படியா சொன்னான்! அவ்வளவு அகங்காரமா அவனுக்கு? இருக்கட்டும், ஷேக்ஸ்பியர், கிராமர், யூக்லிட், ஆல்ஜிப்ரா, ஹிஸ்டரி இதுகளையெல்லாம் குருட்டு பாடம் பண்ணி

விட்டு எவனுவது பெரிய டாக்டராய்ப் போய்விட்டான் என்று எப்பொழுதாவது கேள்விப் பட்டிருக்கிருயா நீ? நல்லது, அந்த சர்ஜன் ஜெனரல் தான் வரட்டும், நான் யோசனை பண்ணி யிருக்கிற சிகிச்சையைப்பற்றி அவரென்ன சொல்லுகிருரோ நான் பார்க்கிறேன்.

தே. கமலாவுக்கு இப்பொழுது கண்டிருக்கிற வியாதி என்ன வியாதி? அதை என்னிடம் சொன்னுல் என்னதப்பிதம்? ஒன் றும் அபாயகரமானதல்லவே?

சீ. எங்கள் வயித்திய சாஸ்திரக் கோட்பாட்டின்படி நான் ஒன் றும் இவ்விடம் சொல்லக்கூடாது. ஆயினும் கமலா என்னமோ புத்திசாலியான பெண்; அவளென்னைப்போல என்கிருர்கள். தான் இன்ன மாதிரியான அபாயகரமான ஸ்திதியில் இருக் கிருள் என்கிற விஷயம் அவளுக்குத்தெரிந்திருந்தால் ஒருவிதத் தில் நல்லதுதான். நியாயமாகச் சொல்வதானுல், ஒவ்வொரு வயித்தியனும் நோயாளியிடம் உண்மை யொன்றையும் ஒளி யாது வெளியிட வேண்டுமென்றேதான் எண்ணுகிறேன். இதைப்போல் நல்லது ஒன்றும் கிடையாது. வாஸ்தவத்திற்கு மிஞ்சி என்ன இருக்கிறது?

தே. ஆனுல் இவளுடைய ஸ்திதி அவ்வளவு அபாய மானதா? நான் நினைக்க முடியவில்லை; அப்படி என்ன இருக்கப் போகிறது அவளுக்கு? உடம்புகூட சுட இல்லையே.

சீ. நீ சொல்வதெல்லாம்—எந்த பெண்பிள்ளைக்கும்—அவள் வைத் தியருடைய பெண்சாதியாய் இருந்தபோதிலும்—இவைகளை யெல்லாம்பற்றி ஒன்றும் தெரியாது என்பதைத்தான் ஸ்பஷ்ட மாய் ரூபிக்கிறதெனக்கு!

தே. இந்த காலத்தில் பெண்பிள்ளைகள்கூட வயித்தியர்களாக இருக் கிருர்களே, அவர்கள் கூட என்னைப்போல்தானே? அவர்களில் கொஞ்சம் பெயராவது உங்களைப்போல் இருக்கமாட்டார்களா?

சீ. என்னைப்போலவா? ஆண்பிள்ளை யாகட்டும் பெண்பிள்ளை யாகட்டும் என்னைப்போல இருபது வருஷம் பென்ஷன் வாங்கி னது யார்?

தே. இப்பொழுது பென்ஷனைப்பற்றி கவலை வேண்டாம். இப் பொழுது கமலாவுக்கு என்ன உடம்பு, அதைச்சொல்லுங்கள்.

ஏன் அவள் அபாயகரமான ஸ்திதியில் இருப்பதாக நினைக்கிறீர்கள்?

சீ. உம்—எனக்கு சரியாகத்தெரியவில்லை. கொஞ்சம் சந்தேகமாகத்தானிருக்கிறது. அவளுடைய ஹிருதயம் ஏதோ கொஞ்சம் கெட்டுப்போயிருக்கிறதென்பது மாத்திரம் எனக்குத் தெரிகிறது. எப்படி மூச்சுவிடுகிறாள் பார்? அது மூன்று விஷயங்களில் ஒன்றாயிருக்கவேண்டும். ஒன்று, அவள் ஹிருதயமானது அபாயமானபடி உப்பிப்போயிருக்கலாம், அல்லது மிகவும் வீங்கிப்போயிருக்கலாம், அல்லது இடம் மாறிப்போயிருக்கலாம்.

தே. என்ன கிரஹசாரமாயிருக்கிறது! இவ்வளவு சின்ன குழந்தைக்கு இத்தனை பெரிய வியாதிகளா? ஐயோ! கமலா! நான் என்ன செய்யப்போகிறேன்!

க. அம்மா, நீங்கள் பயப்படாதீர்கள். இப்பொழுது என்னைப் பிடித்திருக்கும் வியாதி இன்னதென்று தான் அப்பா சரியாகக் கண்டுபிடித்துவிட்டாரே! இனிமேல் பயப்படவேண்டிய காரணமில்லையே!

சீ. ஆகவே, கமலா, நான் கண்டுபிடித்தது சரியென்று நினைக்கிறாயல்லவா? அவள் நிரம்ப புத்திசாலியான பெண் என்று உன்னிடம் நான் முன்பே சொல்லவில்லையா? அவள் என்னைப்போல என்பதற்குச் சந்தேகமேயில்லை.

தே. இல்லை இல்லை! பக்கத்துவீட்டு ருக்மணியைக் கேட்டுப் பாருங்கள், அவள் எப்பொழுது பார்த்தாலும் கமலா என்னைப் போல் என்று சொல்லிக்கொண்டிருக்கிறாளே!

க. இது என்ன அம்மா சண்டை! போதும் நிறுத்துங்கள்! நான் யாரைப்போல பிறந்திருக்கிறேன் என்பதைப்பற்றியா நீங்கள் இரண்டு பெயரும் சண்டைபோடுவது?

தே. வேறு எதைப்பற்றி சண்டைபோடுவது நாங்கள்?

க. உம்—என்மீது உங்களுக்கு உண்மையில் பட்சமிருந்தால், நான் பிழைத்து சந்தோஷமாய் வாழும்படியான வழியைப் பற்றி, சண்டைப்போடுங்கள் இப்பொழுது.

தே. அதைப்பற்றி எங்கள் இருவருக்கும் மனஸ்தாபம் உண்டாகாதபடி பரமேஸ்வரன் அருள்வாராக! நீ சிரஞ்சீவியாய்

சுகமாய் வாழவேண்டும் என்பதுதான் எங்கள் இருவருக்கும் கோரிக்கை!

சீ. அதற்குச் சந்தேகமென்ன! இந்த வியாதி ஒரு கஷ்டம் வந்திரா விட்டால், இன்றைத்தினமே பணக்கார ஜமீன்தாருடைய சந்தோஷமுள்ள மனைவியாயிருந்திருக்க மாட்டாயா?

க. அல்லது முதல்தாரம் தப்பிப்போன கிழட்டுப்பிணத்தின் கம்மினாட்டியாகப் போகிற பெண்சாதியாக இருந்திருக்கமாட்டேனா?

சீ. ஆ! அதோ! வியாதியின் கொடுமையைப் பார்த்தாயா? இதனால் ஹிருதயம் இடம் மாறி அபாயகரமான ஸ்திதியிலிருக்கிறதென்று ஸ்பஷ்டமாய் தெரிவிக்கிறது. இல்லாவிட்டால் இம்மாதிரியான புத்தி மாறுட்டங்கள் உண்டாகமாட்டா.

தே. அதென்னமோ எனக்குத் தெரியாது! அந்த கிழ ஜமீன்தாரை அவள் கலியாணம் பண்ணிக்கொள்ளமாட்டேன் என்று அவள் சொன்னால், அதற்கு என்னென்னமோ பெயர் எல்லாம் வைக்கிறீர்கள். அவள் பக்கத்து அறையில் மூர்ச்சையான சமயம்தான் நாம் அந்த ஜமீன்தாருக்கு இவளைக் கட்டிக்கொடுக்க இன்றைத் தினம் நாளாகக் குறித்துக் கொண்டிருந்தோம், உமக்கு ஞாபகமில்லையா? அது முதல் இவள் வியாதியின் வாஸ்தவமான காரணம் எனக்கேதோ சந்தேகமாகவே இருந்துகொண்டிருக்கிறது. நான் எதாவது வாயெடுத்தால், என்னை புத்தியில்லாதவள் என்று வைகிறீர். நான் என்னசெய்வது?

சீ. ஸ்வாமி இந்த உலகத்தைப் படைத்தது முதல், ஹிந்து மதத்தில் உதித்த எந்தப் பெண்ணாவது தன் தகப்பன் தாயார் தனக்கு ஏற்படுத்திய புருஷனைக் கலியாணம்பண்ணிக்கொள்ள மாட்டேன் என்றதை எப்பொழுதாவது உன் காதால் கேட்டிருக்கிறாயா?

தே. இல்லை, வாஸ்தவந்தான், ஆனாலும்—

சீ. இந்த விஷயத்தில் "ஆனாலும்" என்கிற சங்கதியே கிடையாது. இது சுபாவத்திற்கு விரோதம் என்று ஒப்புக்கொள்ளுகிறாயா? இல்லையா?

தே. ஆமாம், சுபாவத்திற்கு விரோதமாகத்தான் தோன்றுகிறது.

சீ. ஆகவே, இரண்டும் இரண்டும் சேர்த்தால் என்ன ஆகிறது?

தே. ஏன்—நான்காகிறது.

சீ. அதே போலத்தான் இதுவும்; சுபாவத்திற்கு எது விரோதமாக இருக்கிறதோ அதுதான் வியாதி. இது சுபாவத்திற்கு விரோதமா யிருக்கிறது, ஆகவே இது வியாதி! இப்பொழுது திர்ப்தி ஆகிவிட்டதா உனக்கு?

தே. இதெல்லாம் எனக்கு என்ன தெரியும்? நான் என்ன படித்திருக்கிறேனு? ஆனாலும், ஒருவிதத்தில்—

சீ. அதோ பார்! மறுபடியும்! ஆனாலும் என்கிற வார்த்தையே வேண்டாம் மறுபடியும்; இவள் ஹிருதயத்தில் ஒரு பக்கம் ஏதோ மிகவும் கெட்டுப்போயிருக்கிறதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஸ்பஷ்டமா யிருக்கிறது.

க. எனக்குக்கூட அப்படித்தான் தோற்றுகிறது அப்பா—ஆயினும் இதற்கு ஒரே சிகிச்சைதான் உமக்குத் தோற்றுவதாகச் சொன்னீரே அது என்ன?

சீ. உம், அதுதான் கஷ்டம். அதை நானுக யுக்திசெய்து கண்டு பிடித்திருக்கிறேன். இதற்கு முன்பாக அதை ஒருவரும் அனுபவம் பார்த்ததில்லை என்று நினைக்கிறேன்—எப்பொழுதும்.

க. அது என்னதான் சொல்லுமே அப்பா?

சீ. உம்! இப்பொழுது நாங்கள்பழகிவரும் தற்காலத்திய ஆங்கிலேய வயித்தியசாஸ்திரப்பிரகாரம் யாதாமொரு உறுப்போ அங்கமோ வியாதியால் பீடிக்கப்பட்டால் அதை வெட்டி யெறியவேண்டியதுதான் தகுந்த சிகிச்சை என்று முடிவாகத் தீர்மானம் செய்திருக்கிறது. இப்பொழுது மாம்பழத்தில் ஒருபக்கம் அழுகிப் போனுல் என்ன செய்கிறோம்? அதை அதுவரையில் அறுத்தெறிகிறோம். அம்மாதிரியாக எந்த வியாதிக்கும் இதுதான் தகுந்த சிகிச்சை! தற்காலத்திய வைத்தியர்களெல்லாம் பழய சமாசாரங்களைக் கட்டிக்கொண்டு அழுகிறார்களேயொழிய, இந்த முக்கியமான சூட்சுமம் அறிந்தார் இல்லை.

க. என்ன அப்பா! ஹிருதயத்தை வெட்டியெறிவதா உங்கள் ஒரே சிகிச்சை?

சீ. அதுதான்!—சுருக்கிச் சொல்லுமிடத்து யுக்திக்கும் வயித்திய சாஸ்திரத்திற்கும் ஏற்றது அதுதான். என்ன புத்திசாலியான பெண்! ஏன், தேவி நான் சொல்லவில்லையா உனக்கு?

க. ஆயினும் அப்பா, ஹிருதயத்தை எப்படி வெட்டிவிடுவது? அதற்கு ஏதாவது யோசனை செய்திருக்கிறீரா?

சீ. அதுதான் எனக்கு கஷ்டமாயிருக்கிறது. குழந்தாய், அதற்கு ஒரு ஆபரேஷந்தான் பண்ணியாக வேண்டுமென்று தோன்று கிறதெனக்கு. அதற்குத் தகுந்த ஆயுதங்கள் என்னிடமிருந் தாலும் என் கை நிரம்ப நடுங்குகிறதே, அதற்கென்ன செய் வது என்று யோசிக்கிறேன்.

க. ஆனால் சர்ஜன்ஜெனரல் வந்தவுடன் அவருக்குச்சொல்லிப் பார்க்கலாம் என்று யோசிக்கிறீர்போலும்?

சீ. அதுதான் என் எண்ணம்—ஆயினும் பார்ப்போம்.

**வேலையாள் அப்பாசாமி வருகிறான்.**

அ. ஜமீன்தார் முதலியார் வந்திருக்கிறார்?—உள்ளே வரலாமா என்று விசாரிக்கசொன்னார்.

சீ. ஏன் வரக்கூடாது? சந்தோஷமாய் வரட்டும்! நானேபோய்—

க. அம்மா நான் பக்கத்து அறைக்குப் போகிறேன். என்னைப் பிடித் தழைத்துக்கொண்டுபோம்.

சீ. கூடவே கூடாது! அது எப்படி போகலாம் நீ? இங்கிருந்த வள் அவர் வருவதாகக் கேள்விப்பட்டு இந்த அறையைவிட்டுப் போனதாகத் தெரிந்தால் ஜமீன்தாருக்கு மிகவும் கோபம் வராதா? அன்றியும் அவர் உனது புருஷன் ஆனது போலத் தான் என்பதை மறக்கலாமா நீ?

க. அவர் இன்னும் அப்படி ஆகவில்லை (ஒருபுறமாக) அப்படி ஆகப்போகிறதுமில்லை!

தே. அது வாஸ்தவம்தானே, தாலிகட்டுமுன் எப்படி புருஷன்?—

**சோம சுந்தர முதலியார் வருகிறான்.**

சோ. இந்த சங்கடம் ஒன்று வந்திராவிட்டால் இன்றைக்கே கட்டியாயிருக்கும்!-எப்படி இருக்கிறாய் கமலா? வேலைக்காரனிட மிருந்து இங்கிலீஷ் டாக்டரை வரவழைக்க ஏற்பாடுசெய்த தாகக் கேள்விப்பட்டேன். உடனே நான் நிரம்ப பயப்பட்டுப் போய் புறப்பட்டு வந்தேன் இங்கு.

சீ. ஜமீன்தார் அவர்கள் இந்தநாற்காலியில் தயவு செய்து உட் காரவேண்டும்.

சோ. நாற்காலி உபசாரம் எல்லாம் இப்பொழுது வேண்டாம். குழந்தை என்னமாயிருக்கிறது ?

க. குழந்தை இன்னும் செத்துப் போகவில்லை!

சீ. கமலா அப்படி யெல்லாம் பேசாதே!—அவள் வியாதி இவ்வாறு மிகவும் புத்தியைமாற்றி விட்டது.

க. வண்டி குதிரையை இழுப்பது போல்!

சீ. குழந்தை, பேசாமலிரு! பேசாதே இம்மாதிரி எல்லாம்! உனக்கு இதனால் பெரும் அபாயம் நேரிடும், ஞாபகம் வைத்துக் கொள்.

க. இல்லை அப்பா, ஒருவார்த்தையும் பேசவில்லை நான்.

சோ. முதலியார், நீங்கள் ஒரு டாக்டராச்சே! கமலாவுக்கு என்ன உடம்பு இப்பொழுது? ஏதோ நிரம்ப அசௌக்கியமாகத்தா னிருக்கிறாள் போலிருக்கிறது.

சீ. அவளுடைய ஹிருதய மிருக்கிறதே—அதுநிறம்ப கெட்டுப் போயிருக்கிறாற் போலிருக்கிறது என்று நினைக்கிறேன்.

சோ. ஹிருதயம் என்று ஒன்றாயிருக்கிறதா இவ்வளவு சின்ன குழந்தைக்கு! பாவம்! அது எப்படி வந்தது இவளுக்கு? அது என்ன அவ்வளவு அபாயமானதா ?

சீ. அல்ல—எப்பொழுதும் அல்ல.

சோ. அது என்ன பரம்பரையாக வருகிற வியாதியா? அல்லது—தாய் தந்தை யாகிய உங்களுக்கு அது எப்பொழுதும் கண்டதில்லையே ?

சீ. இல்லவே யில்லை, இந்தவியாதி தற்காலத்தில்தான் புதிதாய்க் கிளம்பி யிருக்கிறது; இந்த எண்பது வருஷமாக இந்தமாதிரி யான வியாதியை ஒரு முறையும் நான் கண்டதில்லை.

சோ. எனக்கு ஒரு யுக்தி தோணுகிறது அதைப்பற்றித்தான் உங்களுடன் பேசவேண்டு மென்று இங்குவந்தேன்—இன்னும் அந்த இங்கிலீஷ் டாக்டர் வரவில்லையே ?

சீ. இல்லை இன்னும் வரவில்லை, அதை யேன் கேட்கிறீர்கள் ?

சோ. ஏனென்றால் இங்கிலீஷ் டாக்டர் வருவதானால் அது நிரம்ப பிழைக்காத விஷயம் என்று சாதாரணமாகச் சொல்வதுண்டு; அன்றைக்கு செட்டியார் வீட்டில் இங்கிலீஷ் டாக்டருக்குச்

சொல்லி யனுப்பினார்கள், அவர் வருவதற்கு முன்பே ஆசாமி போய்விட்டார்.

சீ. ஜமீன்தார் அவர்கள் சொல்லுகிற யுக்தி என்னவோ?

சோ. என்னுடைய கிராமத்திலிருந்து நிரம்ப கெட்டிக்காரனை வயித்தியர் ஒருத்தர் வந்திருக்கிறார். அவர்கள் வம்சத்தில் இருநூறு வருஷமாக வயித்தியத்தொழில். அவரிடத்தில் ஒரு நல்ல மாத்திரை இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அது நிரம்ப விலை உயர்ந்ததாம். அதைக்கொண்டு இந்த உலகத்திலுள்ள எல்லா வியாதிகளையும் சொஸ்தப்படுத்திவிடுகிறார். இன்று காலை அதைப்பற்றி அவரே என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தார். அந்த மாத்திரை ஒரு இழைப்பு இழைத்துக்கொடுத்து கமலாவை சுவஸ்தப் படுத்துவதாகச் சொல்லுகிறார்.

தே. என்ன ஆச்சர்யம்! அந்த வயித்தியரை இங்கு உடனே அனுப்பிக்கும்படி ஜமீன்தாரை நீங்கள் கேட்கிறதுதானே?

சோ. கட்டாயமாய்! நான் போய் உடனே அவரை இங்கு அனுப்புகிறேன்.

சீ. பொறுங்கள்—பொறுங்கள்! இதிலே கொஞ்சம் கஷ்டம் இருக்கிறது. நான் இங்கிலீஷ் வயித்தியம் படித்த டாக்டர்; என்னுடைய சொந்த பெண்ணுக்கு மருந்து கொடுக்க நானே ஒரு நாட்டுப்புறத்து வயித்தியரைக் கூப்பிட்டேன் என்று சர் ஜன் ஜெனரலுக்குத் தெரிந்தால் அவர் என்ன நினைப்பார்? வாஸ்தவமாக என் பென்ஷனைக்கூட நிறுத்திவிடுவார்கள் என்று எனக்கு பயமாயிருக்கிறது.

சோ. ஆனாலும், உங்களுடைய பெண்ணினுடைய உயிரைப்பற்றி நீங்கள் கவனிக்க வேண்டாமா?

தே. தயவுசெய்து ஜமீன்தார் அவர்கள் அந்த வயித்தியரை உடனே இங்கே அனுப்பிக்கவேண்டும். இந்த உபகாரத்தை நாங்கள் எப்பொழுதும் மறக்க மாட்டோம், எங்கள் கமலாவை எங்களுக்குத் திருப்பிக்கொடுத்ததாக எப்பொழுதும் நினைப்போம்.

சோ. (சிரித்துக்கொண்டே) ஆம் ஆம்!— பிறகு நீங்கள் அவளை எனக்குத் திருப்பிக்கொடுக்கும் பொருட்டு!—இதோ நான்

விரைந்துபோய் அவரை உடனே அனுப்புகிறேன்.—இத்தக்ஷணம்! (போகிறார்).

தே. கிழவனார் நிரம்ப நல்லவர்.

சீ. கிழவனார் என்ன?—அறுபது வயதுகூட ஆகவில்லை!

தே. இல்லையா?

க. அதற்காக நீங்கள் வருத்தப்படுகிறீர்களா அம்மா?

சீ. கமலா, நீ ஒரு வார்த்தையும் பேசமாட்டேன் என்று சொல்லவில்லையா?

க. உங்கள் சின்னஞ் சிறிய மருமகப்பிள்ளை இங்கு இருக்கும் வரையில்தான் பேசமாட்டேன் என்றேன்.

**அப்பாசாமி வருகிறான்.**

அ. ஜமீன்தாரிடமிருந்து வந்த வயித்தியர் வெளியே காத்துக் கொண்டிருக்கிறார். உள்ளே அழைத்து வரவா?

தே. ஏன் அவரை வெளியே காக்கவைத்தாய்? உடனே அழைத்து வா உள்ளே.

(அப்பாசாமி போகிறான்.)

கமலா! எழுந்து உட்கார்! வயித்தியர் வந்தவுடன் உன் நாடியைப் பார்க்க விரும்புவார்.

சீ. குழந்தையை ஒன்றும் தொந்திரவு செய்யாதே; ஹிருதயத்தில் வியாதியுடையவர்கள் அசையவேகூடாது. அவள் எவ்வளவு நோயாயிருக்கிறாள் என்று உனக்கு இன்னும் ஒன்றும் தெரியவில்லை.

**கணபதி வாத்தியார் வருகிறார்.**

தே. ஜமீன்தார் அவர்கள் பேசிக்கொண்டிருந்த பிரபலமான வயித்தியர் தாங்கள் தானே? வாருங்கள் உள்ளே தயவுசெய்து,- இவள்தான் எங்கள் குழந்தை கமலா; இன்றைத்தினம் அவளை ஜமீன்தாருக்குக் கலியாணம் செய்து கொடுக்க நிச்சயித்திருந்தோம். இந்த இரண்டு வாரமாக இந்த ஸ்திதியில் கிடக்கிறாள் நிரம்ப காயலாக; வாஸ்தவத்தில் என்ன வியாதியென்று ஒருவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை.—தயவு செய்து உட்காருங்கள். அவளுடைய நாடியை பரீட்சிக்கிறீர்களா?

க. சந்தேகமென்ன ? நாடியைப்பார்க்காது எங்களால் என்ன செய்யமுடியும் ? அந்தப் புஸ்தகத்தைப் பிரித்துப் பார்த்து தான் நாங்கள் எல்லாம் படித்தறிவது ; வெளியில் குழாய் வைத்துப் பார்த்து இவ்வளவு ஜுரம் என்று தெரிந்து கொண்டு அதனுடன் திர்ப்தி அடைகிறார்களே அந்தமாதிரி எங்களாலே முடியாது !

தே. கமலா, உன் இடதுகையை நீட்டு.

க. (கமலாவின் நாடியைப் பார்த்து) உம் ! நினைத்தேன் !

தே என்ன அது ?

க. ஓ ! சரி !

தே என்ன, நிரம்ப கெடுதியா யிருக்கிறதா என்ன ?

க. எத்தனை நாளாக இப்படி இருக்கிறது ? ஆறுமாதத்திற்கு மேல் இப்படி இருக்கவேண்டும்.

தே இல்லை, அவ்வளவுகாலமாக இல்லை, எல்லாம் இரண்டு வாரமாகத் தான் !

க. மூளை வெளியில் கிளம்புமுன் விரை யானது மண்ணில் ஊறி இருக்க வேண்டும் !

தே. ஆம் ஆம், உண்மைதானே ?

க. சாப்பாடு சரியாக ஏற்றுக் கொள்வதில்லை அல்லவா ?

தே. வாஸ்தவம், ஒன்றுமே சாப்பிடுகிறதில்லை ஒரு பருக்கைகூட.

க. நிரம்ப பலஹீனமாயிருக்கிறது, நாளுக்குநாள் தேகம் இளைத்துக் கொண்டு வருகிறது !

தே. சொல்வது நிரம்ப சரி ! என்ன ஆச்சர்யம் ! எப்படி இதையெல்லாம் கண்டுபிடித்தீர்கள் ?

க. எல்லாம் அந்தநாடி பேசுதம்மா ! நீங்கள் எனக்கு சொல்வானேன் ?

தே. இது என்ன வியாதியோ ?

க. இது அஸ்தியை பற்றி யிருக்கிர உள்ஜுரம் ! அது எலும்பு முதற் கொண்டு உருக்குகிறது.

க. வியாதியை மாத்திரம் எல்லோரும் சரியாகக் கண்டு பிடித்து விடுகிறார்கள், அதற்குச் சரியான ஔஷதம் கொடுக்கத்தான் ஒருவருக்கும் தெரியவில்லைபோலும்.

தே. இப்படி எல்லாம் பேசாதே குழந்தை! இவர் ஒரு பெரிய வயித்தியர். ஜமீன்தார் இவரை அனுப்பியிருக்கிறார், உன் வியாதியை சுவஸ்தப்படுத்த.

க. அப்படியா! எவ்வளவு ஆச்சரியம்!

தே. குழந்தை! கொஞ்சம் சும்மா இரு! இந்த வியாதி இவளுக்குக் கண்டது முதல் இப்படித்தான் பேசுகிறாள் இவள்.

க. அது முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம். ஏனென்றால் இந்தஜுரம் நரம்பைப் போய் பற்றியிருக்கிறது என்று இது தெரிவிக்கிறது. இருந்தபோதிலும் நீங்கள் பயப்படவேண்டிய தில்லை. எங்கள் பாட்டனாருக்குத் தகப்பனார், பழனிமலையி லிருந்த ஒரு சன்யாசியிடமிருந்து ரகசியமாய்த் தெரிந்து கொண்ட ஒரு அபூர்வமான மாத்திரை ஒன்று இருக்கிறது. நவரத்தினங்களின் சாரம், பொன், வெள்ளி, இன்னும் நூற்று எட்டு காட்டு மூலிகைகள், எல்லாம் சேர்த்து அதைச்செய்ய வேண்டியிருக்கிறது. உங்கள் அதிர்ஷ்டம் அவைகள் எல் லாம் என் வீட்டில் சேகரித்து வைத்திருக்கிறேன். இந்த முண்டமங்கலம் ராஜா ஐயாயிரம் ரூபாய் கொடுத்து தனக்காக அந்த மாத்திரையைச் செய்யச் சொன்னார்.

தே. அவ்வளவு செலவாகுமா அதற்கு?

க. ஏ! உங்களுக்கு அதைப்பற்றி என்ன? உங்களிடமிருந்து நான் காசா வாங்கப்போகிறேன். ஜமீன்தாருக்கும் எனக்கும் உள்ள சினேகத்திற்காக இதைச் செய்கிறேன். நான் உங்க ளிடத்தில் ஏதோ பணம் கேட்டதாக அவருக்குத் தெரியவந் தால் அவர் கோபித்துக்கொள்வார். நான் அந்த மாத்திரை களைத் தயார் செய்து நாளை காலை இரண்டு அனுப்புகிறேன். காலையில் ஒரு மாத்திரை, சாயங்காலம் ஒரு மாத்திரை தேனில் கலந்து சாப்பிடவேண்டும். இரண்டு மாத்திரை சாப்பிட்டால் போதும்.

க. உங்கள் மாத்திரைகளை—என் தகப்பனாருக்கு ஒன்றும், என் தாயாருக்கு ஒன்றும் கொடும். அவர்கள் எதை வேண்டு மென்றாலும் விழுங்கி விடுவார்கள்.

சீ. குழந்தை, பேசாமலிருக்கமாட்டாய் நீ! பரம்பரையாக வந்த பிரபலமான ஒரு வயித்தியர் காசு ஒன்றும் வாங்காமல் உன்னை சுவஸ்தப்படுத்துகிறேன் என்கிறார்! நீ அவரை வைகிறாய்!

க. நான் உத்தரவு பெற்றுக்கொள்ளுகிறேன். நான் மறுபடியும் வரவேண்டிய அவசியம் இராது என்று நினைக்கிறேன்.

க. அவசியமே இராது. வாஸ்தவம்!

தே. இதோ பார்! கொஞ்சம் பேசாமல் இரு.

க. குழந்தையைக் கசடாதீர்கள்! பாவம்! குழந்தை என்ன செய்யும்? அந்த வியாதி அப்படி பேசச்செய்கிறது!

தே. ஆமாம். அவள் என்ன செய்வாள் பாபம்! உங்களுக்கும் அப்படியே தோன்றுகிறது எனக்கு மிகவும் சந்தோஷம்.

க. எங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கப்போகின்றது. நான் வருகிறேன்.

தே. கொஞ்சம் வெற்றிலை பாக்காவது நீங்கள் வாங்கிக்கொண்டு போகவேண்டும்.

க. ஆமாம்! வாஸ்தவம்தான். ஆயினும் ஒரு சமாசாரம் சொல்ல மறந்தேன். எனக்குப் பணம் வேண்டியிராவிட்டாலும், ஒரு சவரனாவது நீங்கள் கொடுக்கவேண்டியது உசிதம் என்று நினைக்கிறேன். நீங்கள் கொடுப்பது மருந்தின் செலவில் நூற்றில் ஒரு பங்கு ஆகாது; இருந்த போதிலும் நம்முடைய சாஸ்திரப் பிரகாரம், கஷ்டத்தில் இருப்பவர்கள் கொஞ்சம் பணம் செலவழித்தால் ஒழிய, மருந்து பிரயோசனப்படாது. இதை உங்களுக்கு கியாபகப்படுத்த வேண்டியது என் கடமை என்று நினைத்தேன். ஆயினும் பெரிதன்று, இதை ஜமீன்தார் அவர்களிடமிருந்து வாங்கிக்கொள்ளுகிறேன்.

தே. ஏ ஏ! அது கூடவே கூடாது. சவரனை நாங்கள் வெற்றிலை பாக்குடன் தருகிறோம். அதை நீங்கள் எப்படியும் பெற்றுக் கொள்ளவேண்டும். நாங்கள் செய்த கர்மத்திற்கு நாங்கள் தானே பிராயச்சித்தம் செய்யவேண்டும்.

க. அது நிரம்ப சரி! நான் நாலு மாத்திரைகள் அனுப்புகிறேன். இரண்டு சாப்பிட்டவுடன் பூரணமாக சுவஸ்தமாகிவிடும். மற்ற இரண்டு மாத்திரைகளையும், ஜாக்கிரதையாக வைத்துவையுங்கள். அவ்வளவு விலையுயர்ந்த மாத்திரைகள் கிடைப்பது மிகவும் அரிது.

தே. எல்லாம் உங்கள் தயவு, அப்படியே செய்கிறோம்.

[கணபதி வாத்தியார் போகிறார்.]

அப்பா!—கமலா, இனி எப்படியும் நீ சுவஸ்தமடைவாய். அந்த ஜமீன்தார் என்ன நல்லவர்!

க. எப்பொழுது பார்த்தாலும் அந்த ஜமீன்தார் தானு!

ருக்மணி வருகிருள்.

ரு. தேவி! உன்னுேடு ஒரு வார்த்தை! ஒரு ஜோஸ்யனைப்பற்றி உன்னிடம் சொல்லியிருந்தேனே, அவரை அழைத்து வந்திருக்கிறேன். நீ கமலாவைப்பற்றி அவரைக் கேட்க விருப்பங்கொண்டிருக்கிருய் என்றுநான் தெரிந்தவுடன் அவர் கிராமத்திலிருந்து பத்துமயில் தூரம் இதற்காக நடந்துவந்திருக்கிருர்; கமலாவிக்கு எப்படி இருக்கிறது இன்றைக்கு? கதவண்டையில் காத்திருக்கிருர் அவர்.

சீ. இந்த ஜோஷியர்களுடைய ஜோலியே எனக்கு வேண்டியதில்லை. விதியால் நடக்கப்போகிறதை நாம் அறிந்தபோதிலும் அதைத்தடுக்க நம்மால் எப்படி முடியும்! இந்த ஜோஸ்யர்களெல்லாம் திருட்டுப்பசங்கள்—ஏறக்குறைய எல்லோரும்!

தே. சரிதான்! நீங்களும் கமலாபக்கம் சேர்ந்து அவளைப்போல வார்த்தையாட ஆரம்பித்தீர்களோ? தான் பெற்ற பெண்ணின் உயிரை எப்படியாவது காப்பாற்றவேண்டும் என்று தாயாருக்குக் கவலையிராதோ? தெய்வச் செயலைப்பற்றி நமக்கென்ன தெரியும்? நம்மால் ஆன வழியெல்லாம் நாம் பார்த்துதானே விடவேண்டும்.

சீ. ஆனுல் ஒரு தம்பிடியும் அவனுக்குக் கொடுக்கமாட்டேன்.

ரு. அவர் தனக்காக ஒரு காசும் கேட்கமாட்டார். அது அவருடைய விரதம், வேண்டிய செலவிற்குமேல் ஒரு தம்பிடியும் வாங்கமாட்டார்.

தே. செலவைப்பற்றி நீ கவனிக்கவேண்டாம் ருக்மணி, கமலாவின் உயிரைக் காப்பதென்ருல், கொஞ்சம் ரூபாய் செலவையா கவனிப்பது? தயவுசெய்து போய் உள்ளே அழைத்துவா அவரை.

ரு. ஐயா, ஜோஸ்யம் ஐயர் அவாள்—கொஞ்சம் வாருங்கள் உள்ளே.

ஜோஸ்யர் சூர்யப்பிரகாச ஐயர் வருகிறார்.

இவர்தான் என்னுடைய ஆத்துக்காரர் பங்காளியின் தங்கையின் பெண்ணின் ஜாதகத்தைப் பார்த்து பூசைபோட்டு, அவளுக்குப் பிடித்திருந்த பிசாசை ஓட்டினவர்.

சூ. இந்த பெண்தானே ?—தெரிகிறது.

க. என்ன தெரிகிறது ?

தே. அவள் சொல்வதை ஒன்றும் கவனியாதீர்.

சூ. அதையெல்லாம் நான் கவனிக்கவேமாட்டேன். குழந்தையா பேசுகிறது, பிசாசல்லவோ பேசுகிறது—குழந்தையின் ஜாதகம் இருக்கிறதோ ?

சீ. இல்லை !—எனக்கு ஜாதகங்களில் நம்பிக்கையே இல்லை. நான் ஜாதகமும் எழுதி வைக்கிறதில்லை.

சூ. அதனால் ஒரு கெடுதியில்லை. அது சில்லரை விஷயம். நூற்று எட்டுக்குள்ளாக ஒரு எண் சொல்லுங்கள்.

தே. தொண்ணூற்று ஒன்று.

சூ. தொண்ணூற்றொன்று !—பார்க்கிறேன் ! (கைவிரலினால் கணக்குப்போட்டு) குழந்தைக்கு இருபது வயதாகிறதென்று நினைக்கிறேன்.

தே. சரியாக !

சூ. குழந்தையின் தாயார் தகப்பனார் உயிரோடிருக்கிறார்கள்.

ரு. ஆமாம் ! அதோ இருக்கிறார்களே இரண்டு பெயரும் தெரியவில்லையா ?

சூ. நான் வரிசைக் கிரமமாகப் போகவேண்டியிருக்கிறது. குழந்தையை பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி இங்கிலீஷ் படிக்க வைத்திருக்கிறார்கள்.

தே. ஒரு வேளை அதுதான் காரணமாயிருக்குமோ ?

சூ. உம்—பார்க்கிறேன். குழந்தையின் கலியாணம் இந்த வாரம் ஏற்பாடா யிருந்தது. பிறகு அது தள்ளி வைக்கப்பட்டது.

தே. இதல்லாம் இவருக்கு எப்படி தெரிந்தது ?

சூ. ஒரு ஞாயிற்றுக்கிழமை, இரண்டு வாரத்துக்கு முன், சுமார் நல்ல உச்சிவேளையில் குழந்தை திடீரென்று மூர்ச்சையாகி விட்டது.

தே. நிரம்ப வாஸ்தவம்! என்ன கெட்டிக்காரர்!

சூ. மூர்ச்சையாகிறதற்குக் கொஞ்சம் நிமிஷத்துக்கு முன்னே, வீட்டிற்குப் பின்னுலிருக்கும் வாசலுக்குப் போனுள். அங்கே ஒரு மரம் இருக்கிறது.—வேப்பமரம்.

தே. ஆமாம்.

சூ. எல்லாம் ஸ்பஷ்டமாகிவிட்டது.

தே. என்ன?

சூ. சென்ற அறுபது வருஷமாக அந்த மரத்திலே ஒரு பிசாசு இருந்துகொண்டிருக்கிறது. அது ஒரு ஆண் பிசாசு. ஒரு ஆண் பிள்ளை இறந்து பிசாசாக மாறினது. அவன் தன்னையே கொன்றுகொண்டான், பிசாசாகிவிட்டான், அது முதல் அவன் பெண்சாதியின் மீது அதிக பிரியம் வைத்திருந்தபடி யினுலே பூமியிலேயே சுற்றிக்கொண்டு, அவள் மறுபடியும் பிறப்பாள் என்று எதிர்பார்த்துக்கொண்டு அந்த மரத்திலே இருந்துகொண்டிருக்கிறது. எப்பொழுது சமயம் வாய்க்கும் என்று அந்த பிசாசு காத்துக்கொண்டிருந்தது. ஆனுலும் ஏதோ தப்பாக உம்முடைய குழந்தையை பிடித்துக்கொண் டது என்பதற் கென்னமோ சந்தேகமில்லை.

தே. என்ன ஆபத்து! அது இவளை எப்படி பிடித்துக்கொண்டது?

சூ. அது நிரம்ப ஆச்சரியகரமாக நடந்திருக்கிறது. அது நிழ லிலே கீழ் கிளையிலே இளைப்பாற உட்கார்ந்து பார்த்துக் கொண்டே யிருந்தது. அந்த சமயத்திலே குழந்தை அந்த மரத்தின்பேரில் சாய்ந்து, கிளையை பிடிக்க கையைத் தூக்கும் பொழுது, அந்தப்பிசாசைத் தொட்டுவிட்டது. அது போது மானதாகப்போய்விட்டது. அவள் வீட்டிற்குள் திரும்பிவந்த உடன் அவள் மனதை ஏதோ ஒன்று கலக்கியிருக்கவேண்டும், அல்லது எதனுலாவது அவள் பயந்திருக்கவேண்டும், ஆகவே பிசாசு அவளை நன்ருய்ப் பற்றிக்கொண்டது; அவளுடைய சுய புத்தி உடனே அவளைவிட்டுப் போயிருக்கவேண்டும்.

க. அப்படி நான் ஒன்றும் செய்யவில்லை. அந்த மரத்தருகிற் கூட நான் போகவில்லை.

தே. கொஞ்சம் பேசாமலிரு கமலா—உனக்கென்ன தெரியும்?

சூ. என்ன தெரியக்கூடும் பாபம்! அவள் சுயபுத்தி இல்லையே! ஆகையினாலே இது பிசாசு பிடித்திருக்கிற விஷயமே அல்லது வியாதியல்ல என்பதற்குக் கொஞ்சமேனும் சந்தேகமில்லை.

தே. ஆனால், நீங்கள் என்ன செய்யவேண்டுமென்று சொல்லு கிறீர்கள்?

சூ. நாற்பதுநாள் ஒவ்வொரு தினமும் நான் பூசைபோட்டு மந்திர உச்சாடனம் செய்யவேண்டியதிருக்கிறது. கடைசிதினம் ஒரு பெரிய பூசை போடவேண்டியிருக்கிறது, அன்றைக்கு நூறு பிராம்மணர்களுக்குச் சாப்பாடுபோட்டு, வேஷ்டிகள் கொடுக்கவேண்டும். அப்பொழுது இந்த பிசாசு போய்விடும். இதெல்லாம் கொஞ்சம் கஷ்டம்தான், கொஞ்சம் சிலவும் பிடிக்கும். நான் என்னமோ பணம் வாங்குகிறதில்லை, அதைத் தொடுகிறதுமில்லை, என்று உங்களுக்குத் தெரிந்திருக்கிறது. இந்த பூசைக்குவேண்டிய சாமான்கள் மாத்திரம் நீங்கள் கொடுக்கவேண்டும். தினம் ஒரு ரூபாய்க்குமேல் சிலவு பிடிக்காது; கடைசி நாள் ஒரு இருபது முப்பது ரூபாய் பிடிக்கும் அவ்வளவு தான்.

தே. பணத்தைப்பற்றி எங்களுக்குக் கவலையேயில்லை. ஆயினும் அந்த நாற்பதுநாள் ஆனவுடன் அந்தப் பிசாசு போய்விடும் என்று நிச்சயமாய்ச் சொல்லமுடியுமா?

க. சிலருக்கு பயித்தியம் பிடித்துப்போகும் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம்.

தே. நீ மறுபடியும் வார்த்தையாடினால்—

சூ. அதைக் கவனியாதீர்கள்!

அப்பாசாமி வருகிறான்.

அ. ஐயா, பெரிய டாக் துரையும் சின்ன ஐயாவும் மோடா வண்டியிலே வந்திருக்காங்க. இப்ப தான் வண்டியிலேயிருந்து இறங்கி இங்கே வந்துகினு இருக்காங்க.

சீ. ஐயையோ! நான் என்ன செய்யரது? சர்ஜன்ஜெனரல் என் வீட்டில் நான் ஒரு ஜோஸ்யனோடு பேசிக்கொண்டிருக்கும் பொழுது என்னைப் பார்ப்பதென்றால் இது ஒரு பெரிய அவமானமாகும் எனக்கு. அதற்கு நான் ஒரு பொழுதும் இடங்

கொடுக்கலாகாது. இதோ தேவி! சீக்கிரம் சீக்கிரம்! இந்த ஜோஸ்யரை புறங்கடைப் பக்கமாக வெளியே அனுப்பிவிடு— இந்த தலைகுட்டையை யாவது போட்டுக்கொள்ளுகிறேன்.

[அப்பாசாமி போகிருன்.]

தே. ஜோஸ்யரவாள் இந்தக் கதவுவழியாக கொஞ்சம் தயவுசெய்து வெளியே போகவேண்டும். பணத்தை நாளை தினம் அனுப்புகிறேன்.

சூ. சரி! சரி! அப்படியே! (பின்புறமாக சூர்யப்பிரகாச ஐயர் போகிருர்.)

சீ. எல்லாம் அந்தப்பயல் பண்ணுகிற சில்மிஷம். சர்ஜன் ஜெனரலை முன்னே தெரிவிக்காமல் திடீரென்று அழைத்துக்கொண்டு வருகிறதாவது!

**சர்ஜன் ஜெனரல் ஹாமர் ஸ்மித் கிருஷ்ணமூர்த்தியுடன் வருகிருர்.**

கி. இவர்தான் என் தகப்பனுர். இவரை உங்களுக்குத் தெரியும் என்றீர்களே.

ஹா. ஆம், நன்ருய்த் தெரியும். என்ன சீதாபதி முதலியார், க்ஷேமம் தானு? வர வர உங்களுக்கு வயசு கூடி வருகிறுற்போலிருக்கிறதே! எண்பது வயதிராது உங்களுக்கு இப்பொழுது? என்னை ஞாபகமிருக்கிறதா?

சீ. உங்களை எப்படி மறப்பது நான்? எல்லாம் தாங்களுடைய பாக்கியம். இப்பொழுது நான் அனுபவிக்கும் பென்ஷன் கூட தங்களுடைய கடாட்சம்தான்!

ஹா. எப்பொழுது நாம் கடைசியில் சந்தித்தோம்? ஏறக்குறைய முப்பது வருஷம் இராது?

சீ. சரியாக இருபத்து மூன்று வருஷங்களாச்சுது. நீங்கள் அப்பொழுதுதான் சீமைக்குப்போய்த் திரும்பிவந்து திருநெல்வேலியில் இருந்தீர்கள்.

ஹா. ஆம் ஆம்! அப்பொழுது நீர் ஆஸ்பத்ரியில் வேலையா யிருந்தீர்கள், கியாபகமிருக்கிறது—அல்லவா? அப்பொழுது நடந்த பெரிய கோளாறு எல்லாம் ஞாபகமிருக்கிறதா?

ச. ஞாபகமிருக்கிறது.

கி. இதுதான் என் தங்கை—கமலா—நோயாய்—நிரம்ப நோயாய் —இருக்கிறதாகச் சொல்லுகிறார்கள்.

ஹா. உங்கள் பெண்ணு சீதாபதி முதலியார்? நல்ல பெண். நீங்கள் திருநெல்வேலியிலிருந்த பொழுது பிறக்கவில்லைபோலும். எவ்வளவு துரிதமாய்க் காலம் கழிகிறது? நல்லது—என்ன உடம்பு உங்கள் குழந்தைக்கு?

கி. நீங்கள் என் தகப்பனுரைக் கேட்பதைவிட நேராகக் கேட்டறிவது நல்லதென்று தோற்றுகிறதெனக்கு.

ஹா. உளறுதே பிள்ளையாண்டான்! அவர் காலத்தில் உன் தகப்பனுர் பிரபல வயித்தியராக இருந்தவர். அவருடைய அபிப்பிராயத்தையும் நான் கேட்கவேண்டியது அவசியம்.

சீ. ஆமாங்கள், இந்த காலத்து பசங்களுக்கு வயதில் பெரியவர்களென்றும், அனுபோகஸ்தர்களென்றும் மரியாதையே கிடையாது.

ஹா. ஆமாம் அது உதவாது. ஆயினும், உம்முடைய பெண்ணுக்கு என்ன உடம்பு?

சீ. எனக்கென்ன தெரியும் துரையவாள், ஏதோ கொஞ்சம் நஞ்சம் தெரிந்ததெல்லாம் இந்த இருபது வருஷங்களாக மறந்துவிட்டேன்.

ஹா. அதெல்லாம் உதவாது, சொல்லும், வெட்கப்படாதீர். ஒரு முறை வயித்தியனுனல் எப்பொழுதும் வைத்தியன்தான்! அந்த காலத்தில் அபூர்வமான அபிப்பிராயங்களிலெல்லாம் இச்சையுடையவராக இருந்தீரே! அப்படிப்பட்ட அபிப்பிராயங்கள் உம்முடைய பெண்ணின் அசௌக்கியத்தைப் பற்றி ஏதாவது தீர்மானித்திருக்கிறீரா?

சீ. அதிகமாக இல்லை, இரண்டு மூன்று தான்.

ஹா. நிரம்ப சரி! சொல்லுங்கள் கேட்போம். ஒவ்வொன்றுகச் சொன்னுலும் சரி, எல்லாம் மொத்தமாகச் சொன்னுலும் சரி.

சீ. எல்லாம் தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆயினும் இவளுடைய ஹிருதயம் மிகவும் கெட்டுப்போயிருக்கிறதென்று நினைக்கிறேன். நீங்களே பரிசோதித்துக் கண்டறியலாம். துரையவாள் என்னையேன் கேட்கவேண்டும்?

ஹா. சிநாபதி முதலியார், இந்தப் பெண்ணின் வியாதியின் முன் விருத்தாந்தமெல்லாம் எனக்குத் தெரியாது பாருங்கள்; இந்தப் பெண் உங்களுடைய சொந்தப்பெண், நீங்களே ஒரு வயித்தியர், ஆகவே நீங்கள் கண்டறிந்த விஷயங்களெல்லாம் நான் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம்.

சீ. நல்லது அப்படியே.

ஹா. ஹிருதயம் எவ்விஷயமாகக் கெடுதியாய் இருக்கிறதென்று நினைக்கிறீர்?

சீ. அது மிகவும் கெட்டுப்போய் அபாயமான ஸ்திதியிலிருக்கிறதென்று நினைக்கிறேன்.

ஹா. (கமலாவைப் பரிசோதித்து) என்ன காரணத்தைக்கொண்டு அவ்வாறு நினைக்கிறீர்?—குறிகள் என்ன?

சீ. ஹிருதயமானது பெருத்துப்போ யிருக்கிறதென்று நினைக்கிறேன்.

ஹா. ஹிருதயம் பெருத்துப்போயிருக்கிறதா! நீங்கள் சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை—ஆயினும் நீங்கள் சொல்லுகிறபடி இருக்கலாம் ஒரு வேளை—இன்னும் என்ன?

சீ. அதிகமாக வீக்கமும் கண்டிருக்கிறதென்று நினைக்கிறேன்.

ஹா. வீக்கமா!—இன்னும் ஏதாவதுண்டோ?

சீ. நான் கட்டாயமாய்ச் சொல்லமுடியாது—ஆனாலும் நான்.—

ஹா. சொல்லும்! சொல்லும்!

சீ. இடம் முற்றிலும் மாறியிருக்கிறதென்று நினைக்கிறேன்.

ஹா. இடம் மாறுட்டம்!—உம்!—அப்புறம்?

சீ. அவ்வளவுதான்.

ஹா. ஆகவே நீர் இது ஹிருதயத்தைச்சார்ந்த வியாதி என்று நினைக்கிறீர்கள்.—எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது.

சீ. நான் என் பெண்சாதியிடம் சொன்னேனுங்கள், நான் சொல்வதை எல்லாம் நீங்கள் ஒப்புக்கொள்வீர்களென்று.

ஹா. குறிகளெல்லாம் ஒன்றும் கெடுதியாயில்லையென்றுநான் சந்தோஷப்படுகிறேன்.

சீ. அப்பா! பெருங்கவலை நீங்கினேன்.

ஹா. ஆயினும் ஹிருதயம் பெருத்திருக்கிறதென்றீரே அதைப்பற்றி யோசிக்க வேண்டியிருக்கிறது. அவளுக்குக் கலியாணமா யிருக்கிறதா ?

சீ. இல்லையுங்கள், இந்த அசௌக்கியம் வந்திராவிட்டால் இன் றைத் தினமே ஒரு பெரிய ஜமின்தாருக்குக் கட்டிக்கொடுத் திருப்பேன்.

ஹா. எந்த ஜமின்தாருக்கு ?

சீ. பழவேற்காட்டு ஜமின்தாருக்கு.

ஹா. என்ன ! அந்தக் கிழற்றுப்பிணத்துக்கா ? நீர் என்ன வாஸ்தவ மாகப் பேசுகிறீரா ?

சீ. என் பெண்கூட அவரை அதே பெயரிட்டு அழைத்தாள்.

ஹா. அப்படியா ! அப்பொழுது அவளை நிரம்ப புத்திசாலி என்று சொல்லவேண்டும்.

சீ. வாஸ்தவமாய் அவள் நிரம்ப புத்திசாலிதான். என்னுடைய பந்துக்களெல்லாம் என் பெண் என்னைப்போலவே இருக்கிற தாகச் சொல்லுகிறார்கள்.

ஹா. சொல்லவேண்டியது நியாயம்தானே ! தகப்பனாரைப்போல் இருக்கவேண்டும் பெண் என்பது இந்துக்களில் ஒரு பழ மொழியல்லவா ?—பிறகு என்ன நேரிட்டது ?

சீ. இரண்டு வாரங்களுக்குமுன்பு இதே அறையில் நாங்கள் கலியாணத்திற்காக நாள் குறித்துக்கொண் டிருந்தபொழுது பக்கத்து அறையிலிருந்த இவள் திடீரென்று மூர்ச்சையானாள்.

ஹா. நடுவில் கதவிருக்கிற அந்த அறையிலா ?

சீ. அமாங்கள்—அதில்தான்.

ஹா. இந்த உங்கள் ஜமீன்தாருக்கு அவளைக் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று நீர் யோசித்துக்கொண்டிருந்தது அவளுக்குத் தெரியுமா ? அது அவளுக்கு சம்மதமில்லைபோலும்.

சீ. நான் மாட்டேன் என்றுகூட சொன்னாளுங்கள் !

ஹா. வேறு யாரையாவது கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டு மென்று இஷ்டமுண்டோ ?

சீ. ஆமாங்கள்—மனமோஹனன் என்று ஒரு பிள்ளையாண்டான், என் பிள்ளையின் சிநேகிதன், அவனைக் கலியாணம் பண்ணிக் கொள்ளவேண்டுமென்று விரும்புகிருள் என நினைக்கிறேன்.

ஹா. யார் அவன்?

சீ. அவனுக்கு ஒரு சொத்தும் கிடையாது.—நூறு ரூபாய்க்குக் கூட ஐவேஜில்லை! எங்கேயோ மாசம் நாற்பது ஐம்பது ரூபாய் சம்பாத்யத்தில் இருக்கிறதாகக் கேள்விப்படுகிறேன்.

ஹா. படித்தவனு பிள்ளையாண்டான்?

கி. பி.ஏ. பாஸ் பண்ணியிருக்கிருன். மெடல் வாங்கியிருக்கிருன்

சீ. ஆமாம். இந்தப் பையன்தான் அவளுக்கு இந்த யோசனையை உண்டாக்கி யிருக்கவேண்டுமென்று நம்புகிறேனுங்கள். ஆனு லும், இதற்கும் அவள் தேக அசௌக்கியத்திற்கும் கொஞ்சம் கூட சம்பந்தமில்லேங்கள்.

ஹா. நீங்கள் சொல்வது வாஸ்தவமாயிருக்கலாம், முதலியார்.—ஆனாலும் நோயாளியின் ஸ்திதி மொத்தத்தில் இப்படி இருக்கிறதென்று நான் அறியவேண்டியது அவசியம் பாருங்கள். இது அவசியம் என்று வயித்தியராகிய உங்களுக்குத் தான் நன்ருய்த்தெரியுமே.

சீ. வாஸ்தவம்தானுங்கள்.

ஹா. முதலியார், இப்பொழுது எல்லாம் ஸ்பஷ்டமாய் விளங்குகிற தெனக்கு. நீங்கள் சொன்னது சரிதான் என்று தோற்றுகிற தெனக்கு. இவள் ஹிருதயம் பெருத்தும், வீங்கியும், இடம் மாறியுமிருப்பதாகவும் கூறினதற்கெல்லாம் காரணம் கூறக் கூடும் நான்.

சீ. நிரம்ப சந்தோஷம். தேவி, நான் என்ன சொன்னேன் உனக்கு?

தே. இப்படியேதான் சொன்னீர்கள்.

ஹா. இப்பொழுது, உங்கள் குழந்தையைச் சில கேள்விகள் கேட்கிறேன். அவள் பெயர் என்னவென்று சொன்னீர்கள்?

க. என் பெயர் கமலா.

ஹா. சந்தோஷம். ஏன் அம்மா, உனக்கு இப்பொழுது, மிகவும் பலஹீனமாயும், மனதில் திகிலாயும் இருக்கிறதா?

க. ஆமாம்.

ஹா. இந்தக் கலியாண விஷயத்தைப்பற்றி பேச்சு ஆரம்பிக்குமுன் இப்படி இருந்ததோ?

க. இல்லை !

கு. முதலியார், இவள் ஹிருதயம் பெருத்திருப்பது அவ்வளவு அபாயகரமானதல்லவென்று நினைக்கிறேன். ஹிருதயம் இடம் மாறப்பட்டிருப்பதினால்தான் வீக்கம் உண்டாயிருக்கவேண்டும். இது சகஜமானதுதான்.

சீ. என் காலத்திலே இந்த மாதிரி எல்லாம் இருந்தது இல்லைங்கள்.

கு. இருக்கலாம். அப்பொழுது அவ்வளவு சாதாரணமா யில்லாதிருக்கலாம். ஆயினும், இதற்கு சிகிச்சை செய்வதில் நீர் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

சீ. அப்படியேங்கள். எல்லா விஷயத்திலும் நீங்கள் எப்படி உத்திரவு பண்ணுகிறீர்களோ அப்படியே செய்கிறேனுங்கள்.

கு. நீங்கள் அப்படியே செய்வீர்களென்று நம்புகிறேன், முதலியார். இந்த வியாதிக்குத் தக்க ஔஷதத்தை நான் எழுதிக் கொடுக்கிறேன். என்ன நேர்ந்த போதிலும் அதன்படியே நீங்கள் நடக்கவேண்டும். அதிருக்கட்டும், நீங்கள் ஏதாவது சிகிச்சை யோசித்திருக்கிறீர்களா ?

சீ. நான் எப்படி யோசிக்கிறதுங்கள் ?

க. இல்லை இல்லை ! தான் யோசித்துப் பார்த்ததில் ஹிருதயத்தை அறுத்து எடுத்துவிட வேண்டியதுதான் சிகிச்சையென்று சொல்கிறார்.

கு. ஹிருதயத்தை அறுத்துவிடுவதா ! உம்—அதுவும் ஒரு யோசனைதான்.—முடியுமானால். கமலா, உங்கள் தகப்பனார் சொல்வது ஒரு வேளை சரியாயிருக்கலாம். ஆனால் நாங்கள் ஆயுதப்பிரயோக வயித்தியத்தில் அவ்வளவு தேர்ச்சி யடையவில்லை இன்னும்.

சீ. நான் என்ன சொன்னேன் உனக்கு ?

கு. (ஒரு காகிதத்தில் எழுதி, அதை மடித்து), நல்லது—இதோ சீதாபதி முதலியார், இந்த வியாதியைக் குணப்படுத்தும் மருந்தை இதில் குறித்திருக்கிறேன். ஜாக்கிரதை, அதில் கண்டபடி சரியாக நடக்கவேண்டும். வயித்திய சமூகத்தில் நீர் முதிர்ந்த வயதுடையவராதலால் அதன்படி சரியாக நடப்பீரென்று நம்புகிறேன். நான் வருகிறேன். நான் வருகிறேன் அம்மா கமலா. ஒரு வாரத்திற்குள் உனக்கு எல்லாம் சுவஸ்தமாகிவிடும். நான் வருகிறேன்.

சீ. தங்களுக்கு—நான்—என்ன பீஸ் கொடுக்கவேண்டுமென்று தெரிவித்தால்—

கு. பீசாவது?—என்ன இப்படி பேசுகிறீர்? வயித்தியர்களுக்குள் ஒருவருக்கொருவர் பீசு வாங்குவதாவது! நான் வருகிறேன்.

சீ. நிரம்பவந்தனம், தங்களுடைய தயாள குணத்தை எப்பொழுதும் மறவேன்.

மி. அதொன்றுமில்லை,—நான் வருகிறேன் (போகிருர்.)

சீ. நம்முடைய சர்ஜன் ஜெனரல் என்ன நல்ல பெரிய மனுஷர்!

தே. ஏன் தாமதிக்கிறீர்? ஆப்பாசாமியை அனுப்பி மருந்தை வாங்கிக்கொண்டு வரச் சொல்லுங்கள்.

சீ. ஆ!—அதை மறந்தேன்—எதோ பார்ப்போம்!—(காகிதத்தைப் பிரித்துப் படித்து) என்ன இது! என்ன எழுதியிருக்கிறது இங்கே?

க. என்ன—என்ன அப்பா அது? ஏன் ஆச்சரியப் படுகிறீர்கள்? என்ன சமாசாரம்?

சீ. என்ன!—மருந்தின் விவரம் ஒன்றும் எழுதியில்லையே இதில்!

க. வேறென்ன எழுதியிருக்கிறது?

சீ. எழுதியிருப்பதைக்கேள்—“உம்முடைய பெண் கமலா, மனமோஹனன் மீது தான் கொண்ட காதலால் ஹிருதயத்தில் நோயுற்றிருக்கிருள்—அவளுடைய ஹிருதயம் பெருத்திருப்பதற்கு அந்தக்காதல்தான் காரணம்—தாரத்தையிழந்த ஓர் தள்ளாத கிழவனை அவள் தலையில் நீர் கட்டுவதற்கு பல வந்திப்பதினுல்தான் அவள் ஹிருதயம் மாறியிருக்கிறது, இதன் பலனுக அவள் ஹிருதயம் வீக்கமடைந்தது. நீர் இதற்குச் சிகிச்சை செய்வதில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஜமீன்தாரைவிட்டு மனமோஹனனுக்கு அவளை உடனே மாற்றவேண்டும். ஒரு வாரத்திற்குள் அவர்கள் இருவருக்கும் விவாகத்தைச் செய்யும். உடனே அவள் சுதஸ்தமாவாள். நீரும் ஒரு வயித்தியனுனதால், மேற்கூறிய சிகிச்சையைபற்றி நான் சொன்னப்படி நடத்திவைப்பீரென்று நம்புகிறேன்

இப்படிக்கு,
ஹாமர் ஸ்மித், சர்ஜன் ஜெனரல்.

கி. இதுதானே சிகிச்சை ? நிரம்ப சந்தோஷம் !

தே. முதலிலிருந்து இப்படித்தா னிருக்கவேண்டுமென்று நான் சந்தேகித்தபடியே முடிந்தது.

சீ. நான்தான் ஒருத்தன்—மடையன் !

க. இல்லை அப்பா—அப்படிச் சொல்லாதீர்கள் !

சீ. இந்த ஜமீந்தாரை என்ன செய்கிறது ?

கி. சட்டிசுட்டால் என்ன செய்கிறது ?

சீ. எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது—நான் ஜமீன்தாருக்கு வாக்களித்துவிட்டு இந்த சிகிச்சையை மனப்பூர்வமாக எப்படி நிறைவேற்றுவது?

கி. அவருக்கு உம்முடைய வாக்கைத்தான் கொடுத்தீர்—பெண்ணைக் கொடுக்கவில்லை. அன்றியும் அப்பா, நீரும் ஒரு வயித்தியர் என்பதை மறக்கலாமோ ?

சீ. வாஸ்தவம், உண்மைதான். உம் ! இதுதான் சர்ஜன்ஜெனரல் விதித்தமருந்து !

நாடகம் முற்றிற்று.

# விச்சுவின் மனைவி

## முதல் அங்கம்—முதற் காட்சி.

இடம்—சேத்துப்பட்டில் ராஜாபாதர் முதலியாருடைய தோட்டம்.

காலம்—சாயங்காலம்.

**விஸ்வநாத ஐயர், சுந்தரராஜ ஐயங்கார், ராஜாபாதர் முதலியார்** பந்தாட்டம் ஒன்றாடிவிட்டு, தோட்டத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.

**வி.** மடையனாகவில்லை இன்னும் நான்—அந்தப் பெண்ணையாவது வேறெந்தப் பெண்ணையாவது மணம்புரியேன்.

**சு.** வாஸ்தவம்தான், அவ்வளவு புத்திசாலித்தனமாக நடக்க முடியாது அவனால்.

**ரா.** தம்பி—உன்னுடைய ஆட்சேபனை என்ன—இப்பொழுது நாம் பேசிக்கொண்டிருந்த பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளக்கூடாதென்பதா—அல்லது கலியாணமே கூடாது—அதாவது கலியாணம் என்கிற வியவஹாரமே—சரியல்ல என்பதா?

**வி.** அதெல்லாம் எனக்குத்தெரியாது. என் மனதில் தோற்றும் எண்ணங்களை, நமது சிநேகிதர், மனோபாவங்களைப் பிரித்தறியும் தத்துவ சாஸ்திரியாரைப்போல் வகுத்துப் பிரித்து ஆராய்வதில்லை நான். எனக்குத் தெரிந்ததெல்லாம்—தத்சமயம் என்மனமானது எந்தவிதமான மணத்தையும் விரும்பவில்லையென்பதுதான்.

**சு.** காரணங்கள் ?—முதலாவது ?

**வி.** அந்தப் பெண்ணை எனக்குத் தெரியாது.

**சு.** இது என்ன அநர்த்தமாயிருக்கிறது !—நம்முடைய பரத கண்டத்தில் கடந்த நாலாயிரத்து தொள்ளாயிரத்து தொண்ணூற் றொன்பது வருஷங்களாக கலியாணம் கூடாது என்ப

தற்கு இதைக் காரணமாக யாராவது கூறியிருக்கிறார்களா ?— சரி, போனால் போகிறது, இரண்டாவது ?

வி. அந்தப்பெண் எனக்கிஷ்டமில்லை.

சு. இது கொஞ்சம் சுமார்—நீ அந்தப்பெண்ணைப் பார்த்ததே யில்லை, ஆகையால் அந்தப்பெண்—உனக்கிஷ்டமில்லை ! இது நிரம்ப தர்க்கசாஸ்திரத்திற் கொத்திருக்கிறது !—மூன்றாவது காரணம் ?

வி. உம்—எனக்கென்ன தோற்றுகிறது—மூன்றாவதுகாரணம்— உம்—எனக்கு கலியாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை.

சு. ஆ ! இதற்குச் சமாதானம் சொல்ல என்றால் முடியாது !— இந்த ஆட்சேபனை, எப்படி ? மொத்தத்தில் விவாகமே வேண் டாம், ஆகவே இதுவேண்டாம் என்றபடியா ? அல்லது இது வேண்டாம்--ஆகவே மொத்தத்தில் கலியாணமே வேண்டாம், என்றபடியா ?

வி. போடா ! உன் குதர்க்கமெல்லாம் என்னிடம் காட்டாதே ! நீ பேசுவது எனக்கொன்றும் அர்த்தமாகவில்லை.

சு. நானும் அப்படியே சொல்லிவைக்கிறேன், நீ பேசுவது எனக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை என்று—தன் சிநேகிதனைத் தனி யாகக் கஷ்டப்பட விடுவது ஒரு சிநேகிதனுக்கேற்றதன்று.

ரா. தம்பி—ஒருவரும் கலியாணம் பண்ணிக்கொள்ளக் கூடாது என்று ஆட்சேபிக்கிறாயா என்ன ?

வி. எந்த புத்திசாலியும் மாட்டான்.

சு. ஆட்சேபிக்க.

வி. சத் !

ரா. உங்கள் தகப்பனார் ஒரு தாரத்துக்குமேல் கலியாணம் செய்து கொண்டாற்போ லிருக்கிறதே ?

வி. ஆமாம்—அவர் செய்துகொண்டார்.

சு. அதுதான் இப்படிப்பட்ட ஞானியை பிள்ளையாய்ப் பெற்றார் !

வி. போதும் நிறுத்து !—என் தகப்பனார் விஷயத்தில் எப்பொழு தும் எவ்வளவு மரியாதை பாராட்டுகிறேனென் றுனக்குத் தெரியுமே.

ஆனால் உன் தகப்பனாரே அன்றைத்தினம், கோயிலில் என்னிடம் சொன்னாரே—எல்லாம் தீர்மானமாகிவிட்டது—அந்த கண்டிராக்டர் சாஸ்திரியாருடைய பெண்ணென்றும், ஸ்ரீதனம் பதினாயிரம் ரூபா யென்றும்.

ஆம்—என் தகப்பனார் இக்கலியாணத்தை எப்படியாவது முடிக்கவேண்டுமென்று மிகவும் விரும்புகிறார் என்று எனக்குத் தெரியும்.

சுபாவம் தான்—அவர் விச்சு அல்ல, விச்சுவின் தகப்பனார், பாருங்கள்.

வி. அப்படி அந்தப் பதினாயிரம் ரூபாயை அடையவேண்டுமென்று அதிக இஷ்டமா யிருந்தால், நீங்களே அந்தப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொள்ளுகிறதுதானே, என்று சொன்னேன் மெல்ல அவரிடம்—அவருக்கு அறுபத்தைந்து வயதுதான் ஆகிறது பாபம்!—இது ஒரு நல்லயோசனைதான் !

சு. பதினாயிரம் ரூபாய் ஒரு நல்லயோசனைதான்—அவர் உடனே எகிறிக்குதித்து—ஒப்புக்கொண்டிருப்பார். எனக்கு சந்தேகமில்லை !

வி. அவ்வளவு குதிக்கவில்லை — என்னவென்றாலும்—ஜனங்கள் சொல்லுகிறபடி வயசானவர் அல்லவா ?

சு. ஆனால் புத்தியில்லாத பிள்ளையாண்டான் வெறுத்ததை......

வி. இல்லை இல்லை ! அந்தப் பெண்வந்து அவருக்கு ஐம்பதுக்கு மேல் வயசாகிவிட்டது என்று தெரிந்து அதைப்பற்றி ஏதோ ஆட்சேபனை செய்ததாம்.

சு. அவள் ஆட்சேபனையை யார் கேட்கிறார்கள் ?

வி. கேட்கவேண்டி யிருக்கிறாற்போலிருக்கிறது. அவள் பள்ளிக்கூடத்திற்குப்போய் படிக்கிறாள் எனக் கேள்விப்படுகிறேன்.

சு. ஆனால் உங்கள் தகப்பனார்—ஐயோ பாபம் கிழவனார் !—அவருடைய ஹிருதயம் வெடித்துப்போய்விடும் !

வி. அவரைப் பார்த்தால்—அந்தப் பெண்ணினுடைய மண்டையை உடைத்துவிடுவார்போ லிருக்கிறது.

ரா. அதெப்படி நியாயமாகும் தம்பி ?

வி. நியாயம்—அநியாயம்—என்கிற வார்த்தைகளெல்லாம் வாலிபர்களுக்குத் தான்.

சு. ஆனால் இந்த திவ்யமான யோசனையை கைவிட்டுவிட்டார்களா என்ன ?

வி. இன்னும் முற்றிலும் விடவில்லை. பெண்ணினுடைய தகப்பனார் என் தகப்பனார் பட்சத்தை எடுத்துக்கொண்டாராம். இன்னும் சண்டை நடந்துகொண்டுதான் இருக்கிறதென்று கேள்விப்படுகிறேன்.

சு. ஒரு தகப்பனார் மற்றொரு தகப்பனாருக்காகப் பரிந்து பேசவேண்டியது நியாயம் தானே !

ரா. ஆமாம், உன்னுடைய மாற்றாந்தாய் சமாசாரம் என்ன ? அவர்கள் இந்த யோசனைக்குச் சம்மதித்தார்களா ?

சு. பெருத்த யோசனைகளெல்லாம் பெண்பிள்ளைகளின் மனத்திற்கு சம்மதமாகாது.

வி. பிரம்மா விதித்தபடி யாகிறதென்று பேசாதிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஏதோ கொஞ்சம் பேரம்நடந்து கடைசியில் ஒரு ஒழுங்கிற்கு வந்திருக்கிறார்களென்று நினைக்கிறேன்.

ரா. அந்தப் பெண்ணின் பந்துக்களுக்கு உன்னுடைய மாற்றாந்தாய் உயிருடன் இருப்பது தெரியுமோ ?

வி. சந்தேகமில்லை அதற்கு—என்னுடைய மாற்றாந்தாய் என்ன கோஷாவா, அல்லது அவர்களையும் அவர்களுடைய குணாதிசயங்களையும் அறியாதிருக்கிறதா என்ன உலகம் ?

சு. அப்படி இருப்பது மாற்றாந்தாய்களுக்கு அசாத்தியமான விஷயம். ஆயினும், கண்ணைத் திறந்துகொண்டே இக் கலியாணத்திற்கு அப்பெண்ணின் தாய் தந்தையர், ஒப்புக்கொண்டார்களென்று சொல்லுகிறாயா என்ன ?

வி. அப்படித்தான் என்று சொல்லக்கூடாது. ஆனாலும் அந்தப் பெண்ணுக்கு மாற்றாந்தாய்தானே இருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் பெண்ணுக்கு வயது ஏழெட்டு தானே ஆகிறது, வீட்டிலே பெரிய மனுஷியாக ஒருத்தி இருந்தால் நல்லது என்று நினைக்கிறாற்போலிருக்கிறது.

சு. பழமொழிகூட இல்லையா, தவத்திற்கொருவர் சண்டைக்கிருவர் என்று ?

ரா. எப்பொழுது கலியாணம் சுந்தரம் ? தையிலா ?

வி. தையோ நையோ !

சு. என் அப்படி? "முடிந்துபோன விஷயத்தை"ப்போல் இதுவும் மாறுதுபோ லிருக்கிறதே.

வி. என் தகப்பனார் அப்பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொள்வது என்று வந்தபோது, பெண்ணையும் கொடுத்து பதினாயிரம் ரூபாயையும் கொடுப்பதா கிழவனுக்கு என்று, அவள் தகப்பனார் ஆட்சேபிக்க ஆரம்பித்தாராம்.

சு. இது என்ன முழுமோசமாயிருக்கிறது ! பதினாயிரம் ரூபாய் தானே ஏற்பட்ட விலை ?

வி. எனக்குக் கொடுப்பதானால்.

சு. உனக்கா—அப்படியா ? உனக்கானால் உங்கள் தகப்பனார் இன்னும் கொஞ்சம் விலையை உயர்த்தியிருப்பாறென்றல்லவோ எண்ணினேன். அந்த கண்டிராக்டருக்கு—ஒரே பெண்—மணிமாத்திரம் அதிகம்—இல்லையோ ?

வி. ஆனாலும் இரண்டாவது வகுப்பில் ஐந்தாவதாக தேறினேனும், ஆகவே பதினாயிரத்துக்குமேல் கொடுக்கமாட்டார்களாம்.

சு. ஓ ! சரிதான் இரண்டாவது வகுப்பிலே ஒவ்வொரு இடத்திற்கும் இரண்டாயிரம் ரூபாய்—ஆகமொத்தம் பதினாயிரம் ! அடடா ! நீ மாத்திரம் மூன்றாவது வகுப்பில் முன்னூராகத் தேறியிருந்தால் என்ன சௌகர்யமா யிருந்திருக்கும் !

வி. ஏன்? உன் அபிப்ராயம் என்ன? நீ சொல்வது எனக்கொன்றும் அர்த்தமாகவில்லை—இதை யெல்லாம்பற்றி இப்பொழுது பேசுவானேன்? நான் தீர்மானித்துவிட்டேன், கலியாணமே செய்து கொள்வதில்லை என்று—இப்பொழுது.

சு. கடைசியிலே சொன்ன வார்த்தைக்காக வந்தனம்.

ரா. ஆனால் விஸ்வம், நீ நிச்சயமாய்ச் சொல்லக்கூடுமா எப்பொழுதும் கலியாணம் செய்துகொள்ள மாட்டாய் என்று—எந்தப் பெண்ணையும் ?

வி. அதெல்லாம் எனக்குத்தெரியாது— என்னுடைய ஏற்பாடு என்னவென்றால் "நிகழ்காலத்தை நீ கவனி—வருங்காலம் தன்னைத்தானே தாங்கிக்கொள்ளும்"—என்பதுதான்—மடையன் ஒருவன்தான் இம்மண்ணுலகில் எப்போதும் மாறமாட்டேன் என்பான்.

சு. அதற்காகத்தான் நீ எப்பொழுதும் மணம்புரியேன் என்று சொல்லுகிறாற்போ லிருக்கிறது.

வி. நான் அப்படிச் சொல்லவில்லை, நான் சொன்னது—முடியாது தற்காலம்.

சு. விச்சு, உன்னை மணம்புரியும்படி திருப்ப எதனால் முடியும் சொல் கேட்போம்.

வி. என் மனைவியால் முடியும்.

சு. சபாஷ்! சுந்தரராஜம்! அசாத்தியன் நீ! இதுவரைக்கும் உனக்குக் கலியாணமாயிருக்கிறவிஷயம் நாங்கள் சந்தேகம்கூட கொள்ளாதபடி ரகசியமாய் மூடிவைத்தாயே!

வி. உளராதே ராஜா! நான் சொல்லவந்த தென்னவென்றால்—நான் கலியாணம் செய்து கொள்ளப்போகிற மனைவி.

சு. என்னை மன்னிக்க வேண்டுகிறேன்—அதாவது நீ கலியாணம் செய்துகொள்ளப் போகிற முதல் மனைவி, இரண்டாவது மனைவியைக் கலியாணம்செய்து கொள்ளும்படி உன்மனதைத் திருப்புவாள் என்கிறாயோ?—இது ஒரு புதியசாஸ்திரமாயிருக்கிறது! டார்வின் துரைகூட இதைக் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்!

வி. போடா! நீ வேண்டுமென்றே நான் சொல்வதற்கெல்லாம் தாறுமாறாய் அர்த்தம்பண்ணுகிறாய்!

சு. பிறகு என்ன?

வி. நான் சொல்லவந்த தென்னவென்றால்—யார்எனக்கு மனவியாக வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவள் ஒருத்திதான் மணம்புரியும்படி என்மனத்தை மாற்ற முடியும் என்பதே.

சு. விச்சுவினுடைய மனைவி எப்படிப்பட்டவளா யிருக்கவேண்டும், அதை அறிய நான் ஆவல் கொண்டிருக்கிறேன்—அவள் வயது,

தாய் தகப்பன்மார், ஜாதி, குலம், கோத்திரம், நிறம், உயரம்—முகச்சாயல், பெயர், குணதிசயங்கள்—கல்விப்பயிற்சி முதலி யன எல்லாம், சொல்பார்க்கலாம்—ஒவ்வொன்றாய்.

வி. உம்—பதினாறுவயதுக்குக் குறைந்திருக்கக்கூடாது.

சு. அறுபது வயது இருக்கலாமா ?

வி. போடா ! விளையாடாதே.

சு. இல்லை இல்லை ! பதினாறுவயதுக்கு மேற்பட்டிருக்க வேண்டு மென்று சொன்னையே என்று கேட்டேன்.—நீ வேண்டுவ தென்னவென்றால் என்றும் பதினாறு !—பேஷ் !

வி. அவள் உயரமாய் இருக்கவேண்டும்.

சு. பனைமரத்தைப்போல் !

வி. அடேய் !

சு. இல்லை இல்லை !—உன்னைவிட உயரமா இருக்கவேண்டுமென் கிறாயோ ?—நியாயம்தான். நீ குட்டையாயிருக்கிறதற்கு அவள் உயரமாயிருந்தால் சரியாய்ப்போகும் !

வி. அவளுடைய கண்கள் தாமரையைப்போல் அழகாயும் மான் விழியைப்போலவும் இருக்கவேண்டும்.

சு. இரண்டும் ஒன்றாய்ச் சேர்ந்திருப்பது கஷ்டம் !—ஆனாலும் சரி—அப்புறம்.

வி. அவள் நிரம்ப அழகாயிருக்கவேண்டும்—ரவிவர்மா படத்தில் இருப்பதுபோல்.

சு. பலேபேஷ் !

வி. அவளுக்கு சித்திரம் எழுதத் தெரிந்திருக்கவேண்டும்—கவி பாடவும் தெரிந்திருக்கவேண்டும்.

சு. அப்பாடா !

வி. சகல கலைகளிலும் வல்லவளா யிருக்கவேண்டும், மிருதுபாஷிணி யாயிருக்க வேண்டும், அன்ன நடை யுடையவளாயிருக்க வேண்டும்—நன்னடக்கை யுடையவளாயிருக்கவேண்டும், தீர்க் காலோசனை யுடையவளாயிருக்கவேண்டும், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, முதலிய—

சு. பொறு தயவுசெய்து ! மூச்சுவிட கொஞ்சம் சாவகாசம் கொடு, மூச்சுதெணறுகிறது எனக்கு !—

வி. நீ என்னை ஏளனம் செய்வதானால் உனக்குச் சொல்லமாட்டேன். போ!

சு. நீ சொல்லிமுடியவில்லையா எல்லாவற்றையும்? ஆனால் உன்னை மன்னிப்புகேட்க வேண்டியதுதான்—ஏதோ ஏறக்குறைய முடிவிற்கு வந்தா யென்று யெண்ணினேன்.

மதனகோபால் வருகிறான்.

ம. விச்சு, ரமணன் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறான்—எங்கள் ஆட்டம் முடிந்துவிட்டது; நீ அவனை ஜெயிப்பதாகப் பந்தயம் போட்டாயாமே, அதை ஆடக்கூப்பிடுகிறான்.

வி. இதோபோகிறேன்—நான் என்ன பின் வாங்குவேன் என்று எண்ணினை என்ன? [போகிறான்.]

சு. என்ன முதலியார்? விச்சுவினுடைய பெண்சாதியைப்பற்றி என்ன எண்ணுகிறீர்கள்? நீங்கள்தான் இந்தியா முழுவதும் சிலோன் தீபமும், சுற்றிப்பார்த்திருக்கிறீர்களே, ஒருவேளை அப்படிபட்ட பெண்ணை நீங்கள்தான் அவன் கண்டுபிடிப்பதற்கு உதவி செய்யக்கூடும் போலும்.

ரா. அவன்கூறிய குணங்களெல்லாம் அமைந்த பெண்ணை நான் எங்காவது கண்டிருந்தால், இவள்தான் விச்சுவின்மனைவி என்று எனக்கு தெரிந்திருக்கும், அந்த பாக்கியம் எனக்கு கிடைத்ததாக எனக்கு ஞாபகமில்லை.

ம. என்ன இதெல்லாம் ராஜா?

சு. பழைய கதைதான்! விச்சு இப்படிப்பட்ட பெண்ணயிருந்தால் தான் நான் கலியாணம் செய்துகொள்வேன், என்று ஏதோ இல்லாததெல்லாம் உளறிக்கொண்டிருந்தான்.

ம. அந்தப் பயித்தியம் அப்பொழுதே அவனை விட்டொழிந்தது என்று நினைத்தேனே!

சு. அது விட்டு விட்டு வருகிறாற்போலிருக்கிறது.

ம. ஐயோ பாவம்! கலியாணத்தைப்பற்றி பேச ஆரம்பித்தால் வாய்க்கு வந்தபடி உளறுகிறான்—ஏனோ இப்படி, என்ன காரணத்தினாலோ என்று ஆச்சர்யப்படுகிறேன்.

சு. அது பரம்பரையாக வருகிறது;—பரம்பரை பாதி, இந்தபாழும் படிப்புபாதி! அவ்வளவே.

ம. இந்த வியாதியினின்றும் அவனை சுவஸ்தப்படுத்த நாம் ஏதாவது மார்க்கம் தேடவேண்டுமென்று நினைக்கிறேன்.

சு. நானும் அப்படித்தான் நினைக்கிறேன்—ஏதாவது அவனைக் கோடா பண்ணி அவனுக்கு புத்திவரும்படிச் செய்தாலோ நாம்?

ரா. கோடா பண்ணினால் கோபம்தான் வரும்.

ம. கோபத்தை யுண்டாக்கினால்தான் குணப்படும் இந்த வியாதி! தென் ஆப்ரிகா கண்டத்தில் கடைசியாகக் கண்டுபிடித்த சித்தாந்தம் இதுதான்.

சு. அதுதான் சரி! நான் நல்ல யுக்தி ஒன்று கண்டுபிடித்திருக்கிறேன் இப்போது!—அதற்காக எனக்கென்ன விலைதருகிறாய்?

ம. கடனாகக் கொடு.

சு. அதெல்லாம் முடியாது, உன்னை நம்பமாட்டேன்—முன்பு ரொக்கமாக வை—போனால்போகிறது, என் ரகசியத்தைச் சொல்லுகிறேன். என்னோடு நீ சேர்கிறாயா? நல்ல வேடிக்கையாக இருக்கும், அதற்கு நான் உத்திரவாதம்.

ம. போலீஸ் கோர்ட்வரைக்கும் போகாத விஷயமாயிருந்தால் நான் சம்மதம்தான்.

சு. நீ நல்லவனாச்சே!—என்ன முதலியார், நீங்கள் குறுக்காகவும் வரக்கூடாது, எங்களைக் காட்டிக்கொடுக்கவும் கூடாது?

ரா. இதிலெல்லாம் நான் சேர்வதென்றால்—பிறகு—ஏதாவது.—

சு. நீங்கள் ஒன்றும் நேராகச் சேரவேண்டியதில்லை எங்களுடன், அப்படி—ஜாடையாயிருந்தாற் போதும்—தெரிந்தும் தெரியாதது போல—தெரிகிறதா?

ரா. அதனால் ஒரு கெடுதியும் நேரிடாததானால் உங்கள் வேடிக்கையைக் கெடுக்க எனக்கு இஷ்டமில்லை; அது இன்னதென்று முதலில் சொல் கேட்கிறேன்.

சு. நாம் காலேஜில் படித்தபொழுது நாடகத்தில் நீ ஏதாவது ஆடியிருக்கிறாயா?

ம. நான் ஆடவில்லை.

சு. போனவாரம் நான் பெங்களூருக்குப் போயிருந்த பொழுது, அங்கே காலேஜ் கொண்டாட்டத்தில், என்னுடைய பந்து ஒரு

நாடகத்தில் ஸ்திரீவேஷம் போட்டதைப் பார்த்தேன், அச்சம் பெண்பிள்ளையைப் போலவே இருந்தான், அவனை என் பந்து என்று நான் நம்பமுடியாததாயிருந்தது; அவன் விடுமுறையில் இங்குவந்து என்னுடன் இருக்கிறான்; அவனை உனக்கு எப்படி நடிக்கவேண்டுமோ அதெல்லாம் கற்பித்து அசல் பெண் பிள்ளையைப்போல் வேஷம்போடச் சொல்லுகிறேன்; ஒரு நாள் இரவு நீ விச்சுவை ஏமாறச்செய்யலாம், நல்ல வேடிக்கையாயிருக்கும் நமக்கெல்லாம், என்ன சொல்லுகிறாய்? இந்த யோசனையைப்பற்றி என்ன நினைக்கிறாய்?

ம. நினைப்பதா? இந்தக் கலியுகத்தில் இதுவரையில் இதற்கு மிஞ்சின யோசனையே கிடையாதென்று சொல்லவேண்டும். ஆனாலும் இதைச் செய்ய என்னால் முடியாதென்று பயப்படுகிறேன்.

சு. உன்னால் செய்யவும் முடியும்—செய்தும் முடிப்பாய்!

ம. நான் சரியாகச் செய்வேனா என்று எனக்கு நம்பிக்கையில்லை.

சு. எனக்கு நம்பிக்கையுண்டு. நான் சொல்வதை நம்பு—எல்லாம் சரியாகப் போம்.

ரா. நீங்கள் அவனை ஏமாற்றப் போய் நீங்களே ஏமாந்து போகிறீர்களோ என்னவோ என்று எனக்கு சந்தேகமாயிருக்கிறது.

சு. அப்படி தவறினால் என்ன கெட்டுப் போகிறது? விளையாட்டில் ஜெயம் என்றும் அபஜெயம் என்றும் வித்யாசம் கிடையாது, இதோ பாருங்கள் முதலியார்—பத்துக் கொன்று, நான் ஜெயிப்பதாகப் பந்தயம் போடுகிறேன். நீங்கள் மாத்திரம் இது செய்யவேண்டும் எனக்கு— கல் என்று சிரித்து விடாதீர்கள். ரகசியத்தை வெளியில்விடாதீர்கள்—ஏதோ நீங்களும் நம்புவதாக மேலுக்கு காட்டுங்கள்—மற்றதை யெல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

ரா. சரி!

சு. முதலியார் ஆம் என்று சொன்னால் அதை அல்ல என்று சொல்ல மும்மூர்த்திகளாலும் முடியாது.—அதோ அவர்கள் வருகிறார்கள். சரி, மதன், எல்லாம் தீர்மானம்தானே?

ம. சரிதான்—பழி ஏதாவது வந்தால் உன்பேரில்.

சு. முழுமையும் நானே தாங்குகிறேன்.

**விஸ்வநாதனும் ரமணனும் வருகிறார்கள்.**

ர. தோற்றுப் போனேன் என்று ஒப்புக்கொள்—தோற்றது தோற்றது தான்—விவரங்களில் என்ன இருக்கிறது?

வி. நான் தோற்கவில்லை—மூன்று செட்டுகள் யார் ஜெயிக்கிறார்களோ அவர்கள்தான் ஜெயித்தவர் என்று தீர்மானித்துக் கொண்டோம்; ஒரு செட் ஆடுவதற்குத் தான் பொழுதிருந்தது, ஆகவே இரண்டு பக்கமும் தோல்வி ஜெயிப்பு கிடையாது.

சு. ஐயா பெரிய மனுஷ்யர்களே! கொஞ்சம் நிறுத்துங்கள். இந்த வியவஹாரத்தைத் தீர்க்க நானே என்னை மத்யஸ்தனாக ஏற்படுத்திக் கொண்டேன். என் தீர்மானம் என்ன வென்றால்—நீங்கள் இரண்டு பெயரும் சரி, இரண்டு பெயரும் தப்பு. இனி சண்டை வேண்டாம்.

ர. நாங்கள் என்ன சண்டையா போட்டோம்—வாஸ்தவமாக?

சு. வாஸ்தவமாக இல்லையா? ஆனால் எனக்கு வருத்தமாயிருக்கிறது.

ம. வேறே ஏதாவது பேசுவோம்.

சு. சந்தோஷமாய்—வீட்டிற்குப் போகிற விஷயத்தைப்பற்றி பேசுவோம்.

ம. ஆம், இருட்டாகிறது—வழியைக் காட்டவாவது அல்லது நமது மதியை மயக்கவாவது சந்திரனுமில்லை இன்று.

சு. எப்பொழுது பௌர்ணமி?—நாம் எல்லாம் நிலாவிருந்து வைத்து எத்தனை மாதங்களாகிறது?

ர. உம்—ஏதோ பார்க்கலாம்—வருகிற சனிக்கிழமை பூர்ணசந்திரன். நிலா பார்டிவைத்து நிரம்பநாட்கள்தான் ஆயின—என்ன பிரதர் என்னசொல்லுகிறீர்கள்?

ரா. நல்லது—உங்கள் இஷ்டப்படியே ஆகட்டும்—வருகிற சனிக்கிழமை—மதன், ஏற்பாடுகளெல்லாம் நீ பார்த்துக்கொள்கிறாயா? வெள்ளிக்கிழமை வரையில் நான் வெளியே போக வேண்டி இருக்கிறது.

ம. நான் சனிக்கிழமை இங்கிருப்பது சந்தேகம் என்று நினைக்கிறேன்—எனக்கு வேறுவிதமான வேலையிருக்குமென்று நம்புகிறேன்—ஆனபோதிலும் பார்க்கலாம்.

ர. என்ன ஏற்பாடு செய்யவேண்டி இருக்கிறது? நிரம்ப சின்ன பார்டியாயிருக்கட்டும். பெரியபார்டிகள் எனக்கிஷ்டமில்லை.— நாம் மாத்திரம்தான்—வேண்டியதெல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

ரா. நிரம்ப சந்தோஷம். சனிக்கிழமைக்குமுன் நாம் ஒருவரை யொருவர் சந்திப்பதில்லையா ?

ம. ஒருகால் முடியாதென்று நினைக்கிறேன்.

சு. ஒருவரை யொருவர் பார்க்க வேண்டுமென்று மனது வைத்தால் எப்படியும் பார்க்கலாம்—நான்வருகிறேன். (கொஞ்சதூரம் போய்த் திரும்பிவந்து) ஏ !—மறந்தேன்—எனக்குத்தெரிந்த ஒரு பெண், மிஸ் பாஸ்கர் ராவ் என்பவள், பெங்களூரிலிருந்து இங்கு வந்திருக்கிறாள். நிரம்ப கல்வியறிவும் தேர்ச்சியு மடைந்த பெண். நம்முடைய பார்ட்டிக்கு வந்து நம்முடைய சிநேகிதர் களை யெல்லாம் நிரம்ப அறிய விரும்புவாள் என்று நினைக் கிறேன். அவளை நான் அழைத்து வருவதில் ஏதாவது ஆட் சேபனை யுண்டோ ? ஆட்சேபனை யிராதென்று நம்புகிறேன்.

ரா. இதில் என்ன ஆட்சேபனை இருக்கப்போகிறது—நீ என்ன சொல்லுகிறாய், விஸ்வம்?

வி. ஆட்சேபனையே கிடையாது.

(எல்லோரும் முதலியாரிடம் விடை பெற்றுப் போகின்றனர்.)

**காட்சி முடிகிறது.**

---

## இரண்டாம் அங்கம்—முதற் காட்சி

**காலம்—இரவு 9-மணி**

**இடம்**—அதே காட்சி. ஒரு பார்டிக்காக எல்லாம் ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது.

**ரமணனும் ராஜாபாதர் முதலியாரும்** எல்லாம் சரியாக வைக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்துக்கொண்டு வருகிறார்கள்.

ரா. ரமணன், இன்றிரவு ஒன்றும் சம்பவிக்காதிருக்குமாக !

ர. ஏதாவது சம்பவிக்குமாக !

ரா. நீங்கள் எல்லாம் இன்னும் சிறு பிள்ளைகள்தான்.

ர. நான் பார்க்க ஆவலாயிருப்பது ஒரு சிறு பெண்ணைத்தான்.

ரா. இதையெல்லாம் விச்சு எப்படி ஏற்பானோ?

ர. அவனைப்போலவே—அத்தனை பழய முட்டாளாக.

ரா. இது நியாயமல்ல.

ர. பெரிதல்ல—காதலும் யுத்தமும் கலந்து நடக்கப் போகிறபடியால்.

விஸ்வநாதம் வருகிறான்.

வி. மற்றவர்களெல்லாம் இன்னும் வரவில்லையா?—ராஜா எங்கே? ஏன் இன்னும் வரவில்லை அவன்.?

ர. அவன் மிஸ்பாஸ்கரை அழைத்து வருவதாகச் சொன்னான்.

வி. ஒண்டியாகவா?

ர. எனக்குத் தெரியாது—இருக்கலாம்—தவறென்ன அதில்?

வி. நான் சொல்ல வந்தது—ஆமாம், ஏன் கூடாது?—உம்—ஏதாவது தக்கபடி வண்டி ஏற்பாடு செய்திருக்கிறானோ?—அவன் என்னுடைய வண்டியை அனுப்பும்படி கேட்கவில்லை என்னை.

ரா. நீ அதைப்பற்றி கவலைப்படவேண்டாம் விச்சு. நான் என்னுடைய நேபியர் காரை அனுப்பியிருக்கிறேன்.

வி. நான் ஏன் கவலைப்படவேண்டும்?—சும்மா தெரிந்துகொள்ளக் கேட்டேன். சதாசிவம் எங்கே? மதன் வரவில்லையா இன்றிரவு?

ரா. அவன் ஒருவேளை கொஞ்சம் பொறுத்து தலை காட்டுவதாகச் சொல்லி அனுப்பினான்.

சுந்தர ராஜனும் மிஸ்பாஸ்கரும் வருகிறார்கள்.

சு. இவர்தான் நமக்கெல்லாம் இன்று விருந்து செய்பவர்—ராஜா பாதர் முதலியார்—மிஸ் பாஸ்கர்—நீ அவரை பெங்களூரில் பார்த்ததாகச் சொன்னாயல்லவா?

மி. பா. எப்படி யிருக்கிறீர்கள் முதலியார்? சவுக்கியம் தானே? ஒருநாள் சாயங்காலம் லால்பாக் தோட்டத்தில் நாம் சந்திக்கவில்லையா?

ரா. ஆம் ஆம்! என்ன சரியாக ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாய்!

மி. பா. நான் சொல்வது சரியாக இராது வேறெப்படி யிருக்கும்—உங்களால் என்னை மறக்கமுடியுமோ?

ரா. முடியாது—என்னைக் காண்பித்துக் கொள்வதாயிருந்தா லொழிய.

சு. மிஸ்டர் ரமணன்—மிஸ்பாஸ்கர்.

மி. பா. சவுக்கியம்தானே?—என்னை நீங்கள் இதற்குமுன்பாகப் பார்த்த தாக ஞாபகமிருக்கிறதோ?

ர. எனக்கு—அப்படித்தான் ஞாபக மிருக்கிறது.

சு. என்னுடைய அத்யந்த நண்பர்—விஸ்வநாதம்—மிஸ்பாஸ் கர்.—அவரைப்பற்றி நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக் கிறதே உனக்கு?

மி. பா. ஓ! நன்றாய்!—உங்களுக்குக் கவலை வேண்டாம்—எல்லாம் ஞாபக மிருக்கிறது. நீங்கள் மிகவும் பெயர் போனவர் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். கூடிய சீக்கிரத்தில் உங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்.

[வேறு சில சிநேகிதர்கள் வர, அவர்களுக்கு மிஸ் பாஸ்கரை ராஜாபாதர் முதலியார் தெரியப் படுத்திக் கொண்டிருக்கிறார்.]

வி. ராஜா, மிஸ்பாஸ்கரிடம் என்னைப்பற்றி ஏதாவது கோள் சொல் லிக் கொண்டிருந்தாயா என்ன?

சு. என்னடாப்பா இது! உனக்கு விரோதமாக நான் ஏதாவது கற்பனை செய்ய முடியுமா என்ன?

வி. என்ன ரூபவதி! நடையுடை பாவனைகள்—முகம்—காந்தி—பேச்சு எல்லாம்.—

சி. தயவுசெய்து முடித்துவிடாதே.—அவளை இன்னும் நன்றாய் யறிவதன் முன் உன்வார்த்தைகளை முடித்துவிட்டால்—பிறகு உன்பாடு கஷ்டமாய்முடியும்—பேசுவதற்கு வார்த்தையிராது.

வி. அப்படி ஒருகாலு மிராது—காதல்வலைக் குட்பட்டால்—வார்த் தைகள் தாராளமாய் வருமல்லவா?

மி. பா. (அவன் அருகிற் போய்) என்ன அழகாய் நிலவுகாய்கிறது இன் றிரவு!

வி. இதைவிட அழகானதை நான் என்றும் கண்டதில்லை.

மி. பா. ஆருலகில் இயற்கை அழகைக்கண்டு ஆநந்தப்படுபவரா நீர்?

வி. அவற்றுள் சில சில காட்சிகளைக் கண்டு அதிக ஆனந்த மடை கிறேன் என்று கூறவேண்டும்.

சு. நான் கொஞ்சம் நேரம் வேலையாய்ப் போகவேண்டி யிருக்கிறது, திரும்பி வந்து விடுவேன், விஸ்வநாதம், அதுவரையில் மிஸ் பாஸ்கரைப் பார்த்துக் கொள்.

வி. மிகவும் சந்தோஷம்.

மி. பா. சந்தோஷம்—ஆமாம் சுந்தரராஜ ஐயங்கார், என்னைப்பற்றி கவலைவேண்டாம், போய்வாருங்கள்—உங்கள் இஷ்டப்படியே. ஆயினும், நான் எனது கைகுட்டையை வீசும்பொழுது நீங்கள் சித்தமாயிருக்கவேண்டும்.

சு. கட்டாயமாய்-நான் கவனமாய்ப் பார்க்கிறேன். (ஒரு புறமாகப் போகிறான்).

வி. தயவுசெய்து உட்காருகிறாயா? இந்த நாற்காலி மிகவும் சவுகர்ய மாக இருக்குமென்று நினைக்கிறேன்.

மி. பா. சந்தோஷம், நீங்களும் உட்காரமாட்டீர்களா? ஒரு நாற்காலியை இப்படி இழுத்துக்கொள்ளுங்கள்.

வி. (அப்படியே செய்து அதில் உட்கார்ந்து) நான் உன்னைப்பார்த்தது முதல்—நான் சொல்லவந்ததென்ன வென்றால்—உன்னை அநேகவருஷங்களாகத் தெரிந்தவன் போல் என் மனதில் தோற்றுகிறது. அது இன்னகாரணம் பற்றி என்று சொல்ல முடியாதபடி ஆச்சர்யமாயிருக்கிறது.

மி. பா. அது ஆச்சர்யமன்று, காரணம்கண்டு பிடிக்கக் கஷ்டமானது மன்று போலும்.

வி. அப்படியா ? அது எங்ஙனம் ?

மி. பா. இந்த உடம்பின் உடையில் நாம் ஒருவரை ஒருவர் முதலில் கண்டறிவது கஷ்டமாயிருக்கலாம். உள்ளிருக்கும் உண்மையான நிலையில் நாம் ஒருவரை யொருவர் அறிந்திருக்கலாம் முற்காலத்தில்.

வி. அப்படித்தான் இருக்கவேண்டும். மனுஷ்ய அந்தக்கரணம் என்பது என்ன ஆச்சர்யகரமானது !

மி. பா. அறிந்தும் அறியாத தன்மையுடையதாய் !

வி. ஆம், உலகவாழ்க்கை யென்பதே ஒன்றுக் கொன்று மாறுபாடான இயற்கைகள் உடைத்தாயிருக்கிறது

மி. பா. அப்படி இல்லாவிடின் இவ்வாழ்க்கை ருசியற்றதாயிருக்குமல்லவா ?

[மற்றவர்களெல்லாம் கூடியிருக்கும் இடத்தினின்றும் சங்கீதம் கேட்கிறது.]

வி. அங்கே ஏதோ சங்கீதம் ஆரம்பிக்கப்படுகிறதென்று நினைக்கிறேன். அங்கே போய் அதைக்கேட்க விருப்ப மிருக்கிறதோ?

மி. பா. வேண்டாம் வேண்டாம்! இருவர் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டிருப்பது அந்த சங்கீதத்தைவிட எனக்கு மேலாகத் தோற்றுகிறது.

வி. பழமொழியின்படி, என் மனதிலுதிக்கும் எண்ணங்களின் சங்கீதமே எனக்கு இன்பத்தைத் தருகிறது.

மி. பா. [எழுந்திருந்து] ஆனல், ஐயா, அந்த சங்கீதத்திற்குக் குறுக்காக வந்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும். தாங்கள் தனியாக இருக்க அவ்வளவு விரும்புகிறீர்களென்று அறியாமற் போனேன். குறிப்பாய்ச் சொல்லும் விஷயங்களை சடுதியில் அறியாச் சக்தியற்ற மந்தபுத்தியுடையவளா யிருக்கிறேன்—இன்னும் மற்று அநேகவிஷயங்களிலு மிருப்பதுபோல்.

வி. நான்—என்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்—நான் அப்படி சொல்லவில்லை—சந்தேகமில்லை—நான் சொன்னது—நான் சொல்லவந்தது—சாதாரணமாக இப்படித்தான் சொல்வது அதை, என்று எண்ணினேன்—தயவுசெய்து உட்கார வேண்டும்.

மி. பா. அர்த்தம் ஒன்றும் இல்லாது, மனிதர்கள்—பெரியமனிதர்கள் என்று நான் சொல்லியிருக்கவேண்டும்—எத்தனை வார்த்தைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது.

வி. இது தற்கால நாகரீகத்திற்கு இன்றியமையாதது போலும் என்று எண்ணுகிறேன்.

மி. பா. இருக்கலாம்—நாங்கள் ஸ்திரீகள்—முக்கியமாக உள்ளுக்குள் அவ்வளவு நாகரீகம் அடைந்தவர்களல்ல.

வி. நான் மறுபடியும் உனது மனதைப் புண்படுத்தவில்லையென்று நம்புகிறேன்.

மி. பா. நான் சொல்வது உங்களுக்கு அர்த்தமாகாதிருப்பது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

வி. ஒரு ஸ்திரீயின் ஹிருதயத்தை உண்மையில் அறிவது மிகவும் கஷ்டமென்று சொல்லுகிறார்களே.

மி. பா. ஆயின் ஒரு ஸ்திரீயின் ஹிருதயம் என்னிடமில்லை யென்று நீங்கள் உறுதியாய்க் கூறலாம்.

வி. உன்னுடைய ஹிருதயத்தை உண்மையில் நான் அறியக்கூடுமாயின்!

மி. பா. யாருக்குத்தெரியும்! இன்னும் அரைமணிநேரத்திற்குள் அதை நீர் நன்றாய் அறிந்தாலும் அறியலாம்.

வி. ஆ! அதுவே என் கோரிகை!

மி. பா. வாஸ்தவத்தில்—இப்பொழுதே என்னை வெளியிடுவேன்போல் தோற்றுகிற தெனக்கு.

வி. அப்படிச் செய்வாயாயின் அதைவிட வேறு ஒன்றும் அதிக சந்தோஷத்தைத் தராது எனக்கு.

மி. பா. உம்மைப்போல் நானும் அவ்வளவு உறுதியாய் இருக்கக் கூடுமாயின்.—

வி. என் வார்த்தையை நம்பு.

மி. பா. சந்தேகமில்லை, நாம் சந்தித்த க்ஷணமே, நான் உங்களை நம்பலாம் என்று அறிந்தேன்.

வி. மனிதர்களுடைய குணாதிசயங்களைப்பற்றி என்ன கூர்மையான அறிவுடையவளாயிருக்கிறாய்!

மி. பா. அப்படி ஒன்றும் அதிகமில்லை.

வி. இதனால் உன்னிட மிருக்கும் பல அருங் குணங்களுடன், விநயமும் உடைத்தாயிருக்கிறாய் என்று ரூபிக்கிறாய்.

மி. பா. என்னுடைய சிநேகிதர்கள் வேறு விதமாக எண்ணி யிருந்தார்கள் இதுவரையில். இவ்வருங்குணத்தை மிகவும் சமீபகாலத்தில்தான் பெற்றவளா யிருக்கவேண்டும்.

வி அப்படி வேறாக நினைக்கும் உன் சிநேகிதர்களைப்பற்றி நான் அதிகமாய் எண்ணுவதற்கில்லை.

மி. பா. அப்படித்தான் எண்ணுகிறீர்களென்று எனக்கு ஒருவிதமான சந்தேகம் தட்டுகிறது.

வி. உன்னுடைய சிநேகிதர்கள் யாரையாவது நான் அறிவேனோ ?

மி. பா. காலக்கிரமத்தில் நம்மிருவருக்கும் பொதுவான நண்பர்கள் அநேகர் இருப்பதாக நாம் கண்டறிவோம் என்பது நிச்சயம்.

வி. நீ பெங்களூரிலிருந்து வந்ததாகக் கேள்விப்பட்டேன்.

மி. பா. ஆம், அதை ஒருவிதத்தில் என் ஸ்வீகாரப் பட்டணம் என்று சொல்லலாம்.

வி. பிறகு எது உன்னுடைய சொந்த பட்டணம் ?

மி. பா. நான் இருக்கிறபடி, எதுவும் என்னுடையதல்லவென்று சொல்லவேண்டும். நான் உங்களைப்போலவே சற்றேறக்குறைய பட்டணவாசி யென்று அறிய உங்களுக்கு ஒரு வேளை ஆச்சர்யத்தைத் தரும்.

வி. அது நான் நம்பக்கூடியதாயில்லை.

மி. பா. என்னை நன்குயறிந்தபின் அதை நீர் நம்பத்தான்வேண்டும்.

வி. பட்டணத்தில் நிலையாக யிருக்க நிச்சயித்துவிட்டாயா ?

மி. பா. நான் இப்பொழுது சொல்வதற்கில்லை—அது ஒன்றைப் பொறுத்தது—நான் நினைக்கிறபடி—

வி. எதைப் பொறுத்தது ? நான் கேட்கலாமோ ? அது எப்பொழுது தெரியும் ?

மி. பா. சீக்கிரம் தெரியுமென்று நம்புகிறேன், என்னுடைய தற்கால நிலைமை எனக்குத் திர்ப்திகரமாயில்லை.

வி. நீ இத்தனைகாலம் கலியாண மாகாமல் தனியாயிருக்க எப்படி நேர்ந்தது ? நம்முடைய பெண்களுக்கு, சிறுவயதிலேயே கலியாணமாகி விடுகிறதே-சாதாரணமாக.

மி. பா. ஆம், உண்மையே—நம்முடைய பெண்களுக்கெல்லாம் சிறு வயதிலேயே கலியாண மாய்விடுகிறது.

வி. உன்னுடைய தகப்பனார்—அதாவது உனது தாய் தந்தையர்—தற்காலம் கல்விபயிற்சியில் தேர்ந்த அநேகர் இருக்கின்றனர் என்பது நிச்சயம்.

மி. பா. ஆமாம் அதற்கென்ன சந்தேகம்? என் தகப்பனார் இங்கிலாந்து அமெரிக்கா தேசங்களுக்கும் போய்வந்திருக்கிறார். சிறுவயதில் விவாகம் செய்துகொள்வது பெரியதவறாகும். என்வரையில் நான் பள்ளிக்கூடத்தில் வாசித்த காலத்திலேயே நான் பி. ஏ. பட்டம் பெறுகிறவரையில் விவாகம் பண்ணிக் கொள்வதில்லை யென்று தீர்மானித்துவிட்டேன்.

வி. நீ, பி. ஏ. பட்டம் பெற்றிருக்கிறாயோ? நான் அக் கேள்வி கேட்பதற்காக மன்னிக்கவேண்டும்.

மி. பா. அதில் ஒன்றும் குற்றமில்லை, நான் பி. ஏ. பரிட்சை கொடுத் திருக்கிறேன்.

வி. அது உனக்கு மிகுந்த சந்தோஷத்தைத்தரும் என்று நம்பு கிறேன்.

மி. பா. அப்படியா, நான் நினைக்கவில்லை—என்னைப் போன்றவர்கள் அநேகர் பி. எ. பட்டம் பெற்றிருக்கின்றனர். அவர்களில் நான் முதலுமல்ல என்று உறுதியாய்க் கூறலாம்.

வி. அவர்களுள் நீதான் முதல்—எனக்கு.

மி. பா. அதற்கு நான் உத்தரவாதம் அல்ல வென்று—நம்புகிறேன்.

வி. நீதான் உத்தரவாதம்—உன்னைப் பார்த்தது முதல் நான்—இழந் தேன் என்னிருதயத்தை.

மி. பா. என்ன இழந்தீர்? ஏதாவது விலை யுயர்ந்ததோ?

வி. நான்—நான்—நான் சொன்னது—என்னிருதயத்தை இழந்தேன் என்று.

மி. பா. ஓ! என்னை மன்னிக்கவேண்டும்; உம்முடைய மனமானது சிருங்காரத்தின்மீது சென்றதென்று நான் நினைக்கவில்லை.

வி. எப்பொழுதும் என் மனம் இம்மாதிரியானதுதான், உண்மை யில், நான் பிறந்ததுமுதல்.

மி. பா. வாஸ்தவமாக? ஆனால் அது மிகவும் ஆச்சர்யகரமானதான விஷயம் இல்லையா? அது மிகவும் மனோஹரமா யிருந்திருக்க வேண்டும். நீங்கள் ஒரு சமயம் "சிறுபிள்ளைச் சிருங்காரம்" என்று ஒரு புஸ்தகம் எழுதவீர் போலும்.

வி. நான் நினைக்கவில்லை, நான் ஒரு நூலாசிரியன் ஆவேன் என்று எனக்குத் தோன்றவில்லை.

மி. பா. அநேக நூலாசிரியர்கள் உங்களைப்போல்தா னிருந்திருக்க வேண்டும்—அதைவிட அநேகம் பெயருக்கு உங்கள் மனதிற் பட்டதுபோல் அவர்கள் மனதிலும் பட்டிருக்கவேண்டும். இந்த அற்ப சமாசாரத்தினால் நீங்கள் மனத்தளர்ச்சி அடையலாகாது.

வி. அதொன்றுமில்லை—ஆயினும் என்னுடைய நண்பர்கள் நூலாசிரியர்களாகவும் கவிகளாகவும் இருக்கவேண்டுமென்பது என் இச்சை, அதுதான் சுய நலம்பாராமையாகும்.

மி. பா. அதைப்பற்றி உங்களுக்குக் கவலைவேண்டாம். உங்களிடத்தில் நான் என்கிற அகங்காரம் கொஞ்சமேனும் இல்லை யென்பது ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது.

வி. நீ அந்த உறுதி கூறுவது எனக்கு சந்தோஷத்தை தருகிறது. என்னிடத்திலுள்ள—நான் என்னும் மமதையை அடக்கவேண்டும் என்பது எப்பொழுதும் என்னுடைய விடாமுயற்சியாய் இருக்கிறது. அதைத்தான் நம்முடைய வேதாந்த சாஸ்திரமும் கற்பிக்கிறது.

மி. பா. உத்தமமான வார்த்தை! நீங்கள் சொல்லும் ஒவ்வொன்றும் எனக்கு மறு உறுதியைத் தருகிறது. என்னைப்போல் தாங்களும் எல்லாம் வெளித் தோற்றம் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களென்று நான் சந்தோஷப்படுகிறேன்.

வி. அது நம்முடைய ரக்தத்திலேயே இருக்கிறது, பிறக்கும் பொழுதே அதனுடன் பிறக்கிறோம். ஆரியர்களுக்குப் பாரம்பரையாக வந்த ஐஸ்வர்யம் அது.

மி. பா. அப்படித்தான் இருக்கவேண்டும். தற்கால ஸ்திதி அதனால் அதிகமாய் விளக்கப்படுகிறது.

வி. வருங்காலத்தில் இன்னும் விவரமாய் விளங்கும் அது.

மி. பா. ஆம், ஆம் கூடிய சீக்கிரத்திலேயே.

வி. ஆயினும் என் கோட்பாடு எப்பொழுதும் "நிகழ்காலத்தை நீ கவனி, வருங்காலம் தன்னைத்தானே தாங்கிக்கொள்ளும்" என்பதுதான்.

மி. பா. இதை நான் முன்பு எப்பொழுதோ கேட்டதுபோல் தோன்றுகிறதெனக்கு.

வி. அந்தராஜா—சுந்தரராஜ ஐயங்கார் என்னைப்பற்றி உன்னிடம் கோள் சொல்லி யிருக்கவேண்டும்.

மி. பா. நிச்சயமாய்ச்சொல்ல முடியாது நான். ஓ! ஆம்! என்னுடைய புதுவருஷத்திய குறிப்பு புஸ்தகத்தில் அநேக வருஷங்களுக்கு முன், நான் எழுதிய வார்த்தைகள் எனக்கு ஞாபகம் வந்திருக்க வேண்டும்.

“ போனது பின் உறைகிறது,
வருவது கரந்து நிற்கிறது
தற்காலம் தன்னிலே ”

வி. என்ன ஆச்சர்யகரமான அபிப்பிராயம்! என்ன சௌலப்ய மாகவும் உறுதியாகவும் வெளியிடப்பட்டது! இந்த மூன்று அடிகளுமே தமிழ்க்கவிகளுள் உன்னை ஒரு முற்பட்டவராக ஒப்புக்கொள்ளும்படிச் செய்யவேண்டும்.

மி. பா. நான் ஒரு கவியல்ல.

வி. என்னை மன்னிக்கவேண்டும்—வித்வத்தில் ஆண் பெண் என்றும் வித்தியாசம் கிடையாது.

மி பா. “ வித்வத் ” என்பது கவி பாடுவதன்றி இன்னும் மற்ற கலைகளையும் குறிக்கிறதல்லவா ?

வி. உண்மை—எல்லா கலா சாஸ்திரங்களையும்; சித்திரம் வரைதலை எடுத்துக்கொள்வோம் உதாரணமாக, படம் எழுதுவதில் ஆண் பெண் என்ற பேதம் உண்டோ ?

மி. பா. எனக்கு ஞாபகமிருக்கிறது-சென்ற சென்னைசித்திரக்கலைக் காட்சியில் நான் வரைந்தனுப்பின “குன்றின்மீதிருந்து” என்கிற படத்திற்கு பொன்பதக்கம் எனக்கு அனுப்பித்தபொழுது அதனுடன் அவர்கள் அனுப்பிய கடிதத்தில் என்னைப்பற்றி அப்படித்தான் எழுதியிருந்தார்கள்.

வி. வாஸ்தவமாகவா ? என் ஆச்சரியம் அடக்கமுடியவில்லை! இவ் வுலகத்திலுள்ள பெண்களுக்குளெல்லாம் கண்டோர் கண்களைக் கவரவல்ல கவினுடை ரூபவதி—பி. ஏ. பட்டம் பெற்றவள்—கவி எழுதுபவள்—சித்திரம்வரைபவள் —இன்னும் என்ன ?

மி. பா. நான் அறியேன்.

வி. நான் அறிவேன்—பிறகு நீ பெரும் ஐஸ்வர்யமுடையவள் என்று கூறுவாய் என்று நினைக்கிறேன்.

மி. பா. அது கடினம், ஏதோ கொஞ்சம் லட்சரூபாயிருந்தால் அது ஒரு பெரும் ஐஸ்வர்யமாகுமா ?

வி. கொஞ்சலட்சமா ? இது எல்லாவற்றிற்கும் சிகரமாச்சுதே !

மி. பா. நான் வேறு விதமாக எண்ண வேண்டும்.

வி. இல்லை—அப்படி எண்ண உன்னால் முடியவும் முடியாது—எண்ணவும் மாட்டாய். நான் உன்மீது காதல் கொண்டுவிட்டேன்! உன்னைப் பூஜிக்கிறேன்! நான் என் யௌவனத்தின் கனவிற்கண்ட குணங்களெல்லாம் ஒருங்கு திரண்டு அவதரித்திருக்கிறாய் நீ! உனக்காக என் உயிரைவிடச் சித்தமாயிருக்கிறேன் நான்.

மி. பா. தயவுசெய்து அப்படி ஒன்றும் ஆகாத்தியம் செய்யவேண்டாம்.

வி. ஆம் என்று சொல்லி என்னை சந்தோஷிப்பி. அதைவிட மேலான சந்தோஷம் உலகில் இல்லை, உலகிலுள்ள உயிர் படைத்த மனிதர்களுக்குள் எல்லாம் நான்தான் மிகுந்த சந்தோஷமுள்ளவனாவேன் !

மி. பா. முடியுமானால் கொஞ்சம் புத்திசாலித் தனமாய்ப் பேசும். என்னை நீர் ஒன்றும் கேட்கவில்லையே. எதற்கு நான் " ஆம் " என்று சொல்வது ?

வி. நீ மிகவும் கடூரமான ஹிருதயமுடையவள். நான் வாய்திறந்து கேட்கவும் வேண்டுமா ? என் உள்ளத்தை நீ அறியாயா ?

மி. பா. நான் அறியேன்; எதற்கும் இவ்விஷயங்களிலெல்லாம் ஸ்பஷ்டமாகத் தெரிந்தால் நல்லதல்லவா ?

வி. உன்னிஷ்டப்படியே ஆகட்டும். நான் உன்னை மணம்புரிய விரும்புகிறேன். 'ஆகட்டும்' என்று சொல்லி என்னை சுவர்க்க சுகத்தை அடையும்படிச் செய். வேண்டாம் என்று வெறுப்பாயானால் என்னை துக்க சாகரத்தில் ஆழ்த்தி, எல்லா மனிதர்களைவிட துர்ப்பாக்கியசாலியாக்கி, நரகத்தில் அமிழ்த்துவாய்.

மி. பா. உம், நீர் மிகவும் ஆத்திரமுடையவராகக் காண்கிறீர்.

வி. நான் அல்ல—என்னுடைய காதலானது அவ்வாறு பேசுகிறது. அது இத்தனை வருஷங்களாக உன் வரவை எதிர்ப்பார்த்திருந்தது

மி. பா. எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. என்னால் முடியு மானால் நான் மணம்புரிவேன்—ஆயினும்—

வி. ஆயினும் என்ன? முன்பே யாரையாவது விவாகம் புரிவதாக வாக்குக் கொடுத்திருக்கிறாயா என்ன? ஆன்மா ஆன்மாவுடன் கலந்தபொழுது அந்த வாக்குதத்தங்கள் என்ன தடை செய்யக்கூடும்?

மி. பா. என்னை மன்னிக்கவேண்டும்—எது எதனுடன்! கலந்த பொழுது?

வி. தயவுசெய்து—இன்னும் என்னை சித்திரவதை செய்யாதே, ஆம் என்று சொல்; என்னுயிரைக் காப்பாற்றினவளாவாய்.

மி. பா. இதற்கு இடையிலுள்ள கஷ்டங்களையெல்லாம் நீர் நன்றாய் கவனிக்கவில்லையென்று நான் நினைக்கிறேன். நீர் ஆத்திரத்தினால் கண் மூடப்பட்டிருக்கிறீர்.

வி. வாழ்க்கை என்பது ஓர் வேட்கை, காதலுக்குக் கண்ணில்லை.

மி. பா. உலகவாழ்க்கை யென்பது ஒரு உன்மத்தம், காதல் என்பதோர் கோமாளிக் கூத்து, என்று கூறியது யார்?

வி. எனக்குத் தெரியாது, அப்படிச் சொன்னவன் இரண்டையும் அறியாதவன்.

மி. பா. இரண்டில் ஒன்றையாவது அறிந்திருந்தால் இவ்வளவு ஆத்திரப்பட்டிருக்கமாட்டீர்.

வி. பெரிதல்ல, நான் ஆத்திரம்தான் படுவேன். நான் காக்க மாட்டேன். **(மிஸ்பாஸ்கர் அருகில் நெருங்க முயல்கிறான்; அச்சமயம் மதனகோபால் தன் டோபாவை எடுத்துவிட்டு சுந்தரராஜன் முதலியோர் இருக்கும் பக்கம் பார்த்து தன் கைகுட்டையால் சைகை செய்கிறான்.)**

ம. உன்னால் அதிகமாய்ப் புகழப்பட்ட உன் சிநேகிதன் மதன கோபால்! **(வணங்குகிறான்.)**

வி. **என்ன!**

ம. நீ கேட்டது இன்னும் கெட்டிதானா? நான் ஆம் என்று சொல்லலாமா? என் விச்சு? என் வாயடைத்துப் போய் நிற்கிறாய்?

[சுந்தரராஜன் முதலியோர் இவர்களிருக்குமிடம் வருகிறார்கள்.]

சு. (மதனனைப் பார்த்து, அவன் பதிலுக்குக் கண்ணாற் சைகைசெய்ய) என் விச்சு? உன் இச்சைப்படி வென்றபொழுது. நீ முகத்தைத் தொங்கவிட்டுக்கொண் டிருப்பானேன்? நாங்கள் உன் வண்டிக்கு உத்தரவுசெய்து விட்டோம்; அது காத்துக்கொண்டிருக்கிறது. வா, என்ன வென்றாலும் நீ அதிர்ஷ்டசாலி! எழுந்திருந்து உன் மனைவியை வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோ, நாங்கள் எல்லோரும் வந்து மங்களம்பாடுகிறோம்.

(திரை இறங்குகிறது.)

நாடகம் முற்றிற்று.



PRINTED AT THE INDIA PRINTING WORKS, MADRAS.